# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்



தொகுதி 57

॥ न कर्मणा न प्रजया धनेन
त्यागेनैके अमृतत्वमानशुः॥

இதழ் 6

பிங்கள ௵ ஆனி ௴

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்!

—சுவாமி விவேகானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை - 600 004



# காந்தியடிகளின் பொன்மொழிகள்




★ உண்மையைத்தான் நான் கடவுள் என்று தொழுகிறேன். இன்னும் நான் கடவுளைக் காணவில்லை. ஆனால் அவரைத் தேடிக் கொண்டிருக்கிறேன். இப்படித் தேடுவதில், நான் அருமை பெருமையாகப் பேணுகிற எதையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறேன். என் உயிரைக்கூடத் தியாகம் செய்யத் தயாராக இருப்பேன்.

★ நான் கடவுளை நேருக்கு நேராகக் காண விரும்புகிறேன். உண்மைதான் கடவுள் என்று எனக்குத் தெரியும். என்னைப்பொருத்தவரையில் கடவுளை அறியப் பயன்படும் ஒரே சாதனம் அஹிம்ஸை-அன்பு என்பதுதான்.

★ எப்படியோ ஒரு வழியில் கடவுள் நமக்கு உதவிபுரிய வருகிறார். நம்பிக் கையை இழந்துவிட வேண்டாம் என்றும், நாம் அழைக்கும் போதெல்லாம் தாம் வரத் தயாராகயிருப்பதாகவும், ஆனால் நமது நிபந்தனைகளின்படியின்றி, தமது நிபந்தனைகளின்படி வருவதாகவும் அவர் நமக்கு உணர்த்துகிறார். இது நான் கண்ட உண்மை. ஒரு தடவைகூட, கடைசி நேரத்தில் அவர் என்னைக் கைவிட்டது கிடையாது.

★ இந்தப் பரந்த உலகத்தில் யாதொரு உதவியும் ஆதரவும் இல்லாமல் திக்குத் திசை தெரியாது தவிக்கும் இருள் மண்டிய நேரத்திலும், கடவுளுடைய திருநாமத்தின்சக்தி நமக்குத் தெம்பு கொடுக்கிறது. நமது சந்தேகங்களையும், நிர்க்கதியான நிலையையும் தூரத் துரத்திவிடுகிறது.

முத்தமிழ்ப்பண்ணை 16.8.77.

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—57 | பிங்கள ஹு ஆனி மீ | இதழ் 6 |
|---|---|---|

## பொருளடக்கம்

பக்கம்




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன்இல்லை

— திருமூலர்

| தொகுதி 57 | பிங்கள ஹு ஆனி மீ | இதழ் 6 |
|---|---|---|

## பிரார்த்தனை

पुनरपि जननं पुनरपि मरणं पुनरपि जननी-जठरे शयनम् ।
इह संसारे बहूदुस्तारे कृपयाऽपारे पाहि मुरारे ॥

— भज गोविन्दम्

புனரபி ஜனனம் புனரபி மரணம் புனரபி ஜனனீ—ஜடரே சயனம் |
இஹ ஸம்ஸாரே பஹூ துஸ்தாரே க்ருபாயாऽபாரே பாஹி முராரே ||

— பஜ கோவிந்தம்.

கரையில்லாததும், கடத்தற்கரியதுமான இந்த ஸம்ஸாரத்தில் மறுபடியும் பிறப்பு, மறுபடியும் இறப்பு, மறுபடியும் தாயின் வயிற்றில் கிடத்தல். முராரியே கருணைகூர்ந்து காத்தருள்வாயாக.

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே ஆய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெருமானே
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்(கு) எழுந்தருளுவது இனியே.

—திருவாசகம்





# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

இதயத்தைப் பரிசுத்தமாக்கும் ஞானம்தான் உண்மையான ஞானமாகும். மற்றவைகள் அனைத்தும் அஞ்ஞானமாகும்.

மத உண்மைகளைப் பற்றிப் பேசுவது மிகவும் சுலபம். ஆனால் அவைகளை நடைமுறையில் வாழ்க்கையில் கடைப்பிடிப்பது மிகவும் கடினம். சாஸ்திரங்களை மட்டும் படித்துவிட்டுக் கடவுளைப் பற்றிச் சொல்வது, தேசப்படத்தில் மட்டும் காசியைப் பார்த்துவிட்டு அந்த நகரத்தைப் பற்றி இன்னொருவனுக்கு விளக்கிச் சொல்லுவதைப் போன்றது.

'கடவுள் ஒருவர்தான் உண்மையிலேயே கர்த்தாவாக இருக்கிறார். நான் அல்ல' என்று உண்மையாகவே ஒருவன் உணர்ந்துவிட்டால், அவன் இந்த உடலில் வாழ்ந்து கொண்டிருந்தாலும் முக்தி பெற்றவனே ஆவான்.

சாதாரண மக்கள் மூட்டை மூட்டையாக மத வாழ்க்கையைப் பற்றிப் பேசுவார்கள். ஆனால் எள்ளளவுகூட அதன்படி நடக்க மாட்டார்கள். ஞானியோ, தனது வாழ்நாள் முழுவதும் மத உண்மைகளின்படியே வாழ்ந்தாலும், அதைப் பற்றிச் சிறிதும் வெளியே பேச மாட்டான்.
'கஞ்சா' என்ற வார்த்தையை ஓர் ஆயிரம்முறை உச்சரித்தாலும் கஞ்சா மயக்கம் வந்து விடாது. சிறிது கஞ்சாவைக்கொண்டு வந்து கசக்கிக் குழாயிலிட்டு நெருப்பு வைத்துப் புகையை இழுத்தால் தான் உண்மையில் போதைவரும். ''பகவானே, பகவானே!'' என்று உரக்கக் கூச்சல் போடுவதால் என்ன பயன்? தொடர்ந்து இடைவிடாமல் பக்தி சாதனைகளை நீ பழகி வந்தால், இறைவனைக் காண்பாய்.

கடவுளைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டும் என்னும் உண்மையான தீவிர ஆவலுடன், அகங்காரத்தை எல்லாம்விட்டு சாஸ்திரங்களைப் படிக்க வேண்டும். அவவிதம் இல்லாமல் வெறுமனே படித்தால் கல்விச்செருக்கு, மமதை, தான் மேதாவி என்னும் எண்ணம் ஆகியவைகளைப் போன்ற ஏராளமான முடிச்சுகள்தான் உள்ளத்தில் உண்டாகும். தற்பெருமை கொண்டவனின் உள்ளத்தில் ஜபம், தியானங்கள் எந்த ஒரு பலனையும் உண்டாக்குவதில்லை.

எல்லாம் பகவானின் இச்சைப்படியே நடைபெறுகிறது என்று யார் ஒருவனுடைய உள்ளத்தில் பதிந்திருக்கிறதோ, அவன் கடவுளின் கையில் உள்ள ஒரு கருவியாக மட்டுமே, தான் விளங்குவதை உணர்கிறான். அத்தகையவன் எல்லா பந்தங்களிலிருந்தும் விடுபட்டு, உயிர் வாழ்ந்து கொண்டிருக்கும் இந்தப் பிறவியிலேயே ஜீவன் முக்தன் ஆகிறான். ஈசுவரா! உனது காரியத்தை நீயே செய்தருள்கிறாய். ஆனால் ''நான் செய்கிறேன்'' என்று மக்கள் சொல்கிறார்கள்.

பெயர், புகழ் ஆகியவைகளைத் தேடுபவர்கள், மாயைக்கு உட்பட்டவர்களே ஆவார்கள். ஒவ்வொரு காரியமும் சர்வேஸ்வரனாகிய பகவானின் இச்சைக்கு உட்பட்டே நடைபெறுகிறது என்பதையும், எல்லாப் புகழுக்கும் அவனைத் தவிர வேறு ஒருவருக்குமே உரிமை கிடையாது என்பதையும் அவர்கள் மறந்து போகிறார்கள். ஞானிகள் எப்போதுமே, ''பகவானே, எல்லாம் உன்னுடையன. எல்லாம் உன்னுடைய செயல்'' என்று சொல்கிறார்கள். அஞ்ஞானிகளோ மதிமயக்கத்தில் இருந்து கொண்டு ''எல்லாம் நான்தான் நான்தான் எல்லாவற்றையும் செய்தேன்'' என்று கூறுகிறார்கள்.

ஓம்



# விஜயதீபம்

## தேவியின் தரிசனம்

'கடவுளை அடைய வேண்டும், அவரைக் காண வேண்டும் என்ற ஏக்கம் உண்மையாகவே இருக்க வேண்டும். அப்படி யார் ஒருவனுக்கு இருந்தாலும், அவனுக்கு வேண்டிய வசதிகளை எல்லாம்—சூழ்நிலைகளை எல்லாம் கடவுளே நிச்சயமாகச் செய்து கொடுத்துவிடுவார்' என்ற கருத்தை ஸ்ரீராமகிருஷ்ணர் அடிக்கடி வலியுறுத்திச் சொல்லியிருக்கிறார். அவர் சொன்ன இந்த உண்மை அவரது வாழ்க்கையிலேயே நடந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் காளிகோயில் பூசாரி ஆனார். தெய்வத்தைக் காணவேண்டும் என்ற துடிப்பு, பிள்ளைப்பருவத்திலேயே அவருக்கு விதை வடிவத்தில் இருந்தது. இப்போது வசதியான சூழ்நிலை ஏற்பட்டது. உடனே அந்த விதை முழுமையான அளவில் தனது விஸ்வரூபத்தையே எடுத்துவிட்டது!

ஸ்ரீராமகிருஷ்ணர் காளிகோயிலில் தேவிக்குப் பூஜை செய்ய ஆரம்பித்தார். பூஜை என்றால் சாதாரண பூஜை இல்லை. உடலை மறந்து, உலகத்தை மறந்து, தன்னையே மறந்து, உள்ளம் தோய்ந்து காளி பூஜையை அவர் செய்தார்.

விரைவில், எந்தக் காளிதேவியை விக்கிரகத்தில் வழிபட்டாரோ அதே தேவியை நேரில் காண வேண்டும், அவளோடு பேச வேண்டும் என்ற ஆவல் ஸ்ரீராமகிருஷ்ணரின் உள்ளத்தில் கொழுந்துவிட்டு எரிந்தது.

ஆதலால் அவர், காளி தேவியின் சன்னிதியில் மணிக்கணக்கில் தொடர்ந்து நிறுத்தாமல் பூஜை செய்தார். எப்போதும் அவர், ''அம்மா, நீ உனது தரிசனத்தை எனக்குக் கொடு' என்று சொல்லிப் பிரார்த்தித்துக்கொண்டே இருந்தார். பிரார்த்தனை, தேவியைக் காணுமல் இருக்கிறோமே என்று அழுகையாக மாறியது. குமுறலாக மாறியது. அந்தக் குமுறல் பொங்கி வெடித்து அவரை எல்லாவிதமான சித்ரவதைகளுக்கும் ஆளாக்கியது. அந்த ஒரு துன்பமே அவரது உள்ளத்தில் நிறைந்து நின்று, அவரை வாட்டி எடுத்துக் கசக்கிப் பிழிந்து துடிதுடிக்க வைத்தது. மணிக்கணக்காகத் தேவியின் சன்னதியில் ஆடாமல் அசையாமல் ஒரு கற்சிலையைப் போல உட்கார்ந்து தியானம் செய்தார். தேவியை இன்னும் காணவில்லையே என்று கதறிக் கதறிக் கண்ணீர் விட்டார். கடவுளுக்காக இப்படி ஒருவர் உலகத்திலேயே அழுதிருக்கமாட்டார் என்று சொல்லும்படியாக, கண்ணீர் மாலைமாலையாக, வெள்ளம் வெள்ளமாக, ஆறுகப் பிரார்த்தனையோடு கலந்து அவரிடமிருந்து பெருகிக் கொண்டே இருந்தது.

கோவிலின் வடக்கே ஒதுக்குப்புறமாக அடர்ந்த புதர்களைக்கொண்ட ஒரு பகுதி இருந்தது. 'பஞ்சவடி' என்று அதற்குப் பெயர். மக்கள் சாதாரணமாகப் போகாத அந்த மறைவிடத்திற்குச் சென்று, பகல் முழுவதும் ஸ்ரீராமகிருஷ்ணர் தேவியிடம் பிரார்த்தித்தார். தேவியைக் காண வேண்டும் என்பது ஒன்றே அவரது நோக்கமாக இருந்தது. உணவு, உடை, உறக்கம் போன்ற சிந்தனைகளெல்லாம் அவரைவிட்டுப் போய்விட்டன. அழுது அழுது ஓலமிட்டார். அந்த ஓலம் அவரைவிட்டு ஓயவேயில்லை!

தேவியைக் காணுமல் வாழ்ந்து கொண்டிருக்கிறோமே என்ற எண்ணமே அவரது இதயத்தைக் கசக்கிப் பிழிந்தது. ஒவ்வொரு நாளும் சூரிய அஸ்தமனத்தைப் பார்க்கும்போது, ''அம்மா, அம்மா! வாழ்க்கையிலே இன்னும் ஒருநாளை உன்னைப் பார்க்காமல் வீணுகக் கழித்துவிட்டேனே? கருணைகூர்ந்து நீ உனது காட்சியை

எனக்குக் கொடுக்கமாட்டாயா?'' என்று வாய் விட்டுப் புலம்பி அழுதார். தேவியைக் காண வில்லையே என்ற துன்பத்துடன் தரையிலே முகத்தை வைத்து, வெறி பிடித்தவரைப் போல பலமாகத் தேய்த்துக்கொண்டார். அதன் காரணமாக முகத்திலும், உடலிலும் காயம் ஏற்பட்டது. இரத்தம் வடிந்தது.

''உலகத்திலே எத்தனை எத்தனையோ மகான் கள் உன்னைப் பார்த்திருக்கிறார்கள் அல்லவா? அவர்களுக்கெல்லாம் காட்சி கொடுத்த நீ, எனக்கு மட்டும் உன்னுடைய காட்சியை கொடுக்கக்கூடாதா? நானும் அவர்களைப் போல உனது பிள்ளைதானே? தாயே! எனக்கு நீ மட்டும்தான் வேண்டும். உலகத்திலே உன்னைத் தவிர வேறு எதுவுமே எனக்குத் தேவையில்லை. இது உண்மை, உறுதி'' என்று காளிதேவியின் சன்னிதியில் குழந்தையைப் போல அழுதுகொண்டே கேட்டார். வார்த் தைகள்கூட அவருக்குக் குழறின. திக்கித் திக்கிப் பேசினார். இப்படியே கடவுள் நினைவில் இருந்த அவருக்கு, உலகம் ஒன்று இருப்பதே மறந்துபோய் விட்டது.

**கா**ளியை நேருக்கு நேரே காணவேண்டும், எப் பாடுபட்டாவது தேவியைப் பார்த்தே தீர வேண்டும் என்ற பைத்தியமே அவருக்குப் பிடித் தது. இரவு வந்ததும் யாருக்கும் தெரியாமல் 'பஞ்சவடி' இருந்த மறைவான இடத்திற்குப் போய் விடுவார். இரவு முழுவதும் காளிதேவி யைத் தியானித்துக்கொண்டோ, அழுது கொண்டோ இருப்பார். அதன் காரணமாகக் கண்களும் முகமும் அவருக்குச் சிவந்து வீங்கிப் போய்விடும்.

''இதோ, பொழுது மறைகின்றதே! இந்த ஒரு நாளும் நேற்றைப் போலவே வீணாகி விட்டது! நான் இன்னும் உனது தரிசனத்தைப் பெறாமல் இருக்கின்றேனே! அம்மா! அம்மா! காளி! என் தாயே! உன்னை நான் எப்போது காணப்போகி றேன் தாயே, எப்போது காணப் போகிறேன்? எனது கதறல் உன்னை எட்டவில்லையா? அருள் செய்யமாட்டாயா? உன்னைப் பார்க்காமல் என் னால் வாழமுடியாது தாயே! வாழவே முடி யாது. என்னை இப்படியே ஏமாற்றிவிடலாம் என்று பார்க்கிறாயா? பக்தர்கள் பல பேர் உனது தரிசனத்தைப் பெற்றிருக்கிறார்களே! என்னிடம் மட்டும் ஏன் இப்படி கல்நெஞ்சுக் காரியாக இருக்கிறாய்? உனக்காக இரவும் பக லும் நான் ஏங்குவதை நீ அறிய மாட்டாயா? அம்மா! அம்மா! தாயே! என் தாயே! காளீ! காளீ!'' என்று சொல்லிக் குலுங்கிக் குலுங்கி அழுதார். இப்படி ஒரு அழுகை நாள்தோறும் நாள்தோறும், இரவும் பகலும் அவரிடமிருந்து பொருமிப் பொருமி வெடித்தது. எப்போ தும் பிரார்த்தித்துக் கொண்டேயிருந்தார். எப் போதும் பிரார்த்தித்துக் கொண்டேயிருந்தார். அவ்வப்போது வாய்விட்டுக் கதறி ஏங்கி ஏங்கித் தவித்தார். இப்படி எவ்வளவோ அவர் ஒரு குழந்தையைப் போல தன்னால் ஆன மட்டும் கெஞ்சிக் கூத்தாடிப் பார்த்தார். அவரது உள் ளம் துன்பச் சுழலில், பெரும் புயற்காற்றில் அகப்பட்ட பஞ்சு போலவே தேவியின் தரிசனத் திற்காகப் படாதபாடெல்லாம் பட்டது.

**தா**ன் இருக்குமிடத்திற்கு அடுத்த அறையி லேயே பணம் கொட்டிக் கிடக்கிறது என்று தெரிந்தால், ஒரு திருடனுக்குத் தூக்கம் வருமா? சந்தையிலே அன்னையை இழந்து தவிக்கிற குழந்தை, சந்தையின் விளையாட்டுப் பொருள் களிடத்து, உணவுப் பண்டங்களிடத்து, அங்கே சூழ்ந்திருக்கிற நூற்றுக்கணக்கானவர்களிடத்து மனதைக் கொடுப்பதில்லையே! அதன் நோக்கம் எல்லாம்... அம்மா... அம்மா... என் அம்மா எங்கே? அந்த ஒரே தவிதவிப்பு. என் அம்மா எங்கே? அப்படிப்பட்ட ஒரே ஓலமும் அழுகை யும் ஸ்ரீராமகிருஷ்ணரை தேவிக்காக அழப் பண்ணி திண்டாட வைத்து உருக்கின. முண கினார். முணுமுணுத்தார். தேவியிடம் பேசிக் கொள்வதைப் போல தனக்குத் தானே பேசிக் கொண்டார்.

தவம்....தவம்.... தவம் என்று ஒப்புவமை இல்லாத ஒரு தவ வாழ்க்கையாகவே அவரது வாழ்க்கை மாறிப்போனது. அழுது அழுது அவர் தீர்த்து விட்டார்.

**இ**ந்த நிலையில் ஒருநாள், தேவியைக் காணாமல் இனிமேல் உயிர் வாழ்வதில் பயனில்லை என்ற முடிவிற்கு வந்தார். காளிதேவியின் சன்னிதி யில் ஒரு பெரிய வாள் தொங்கிக் கொண் டிருந்தது. அந்த வாளை எடுத்து, தேவியின் விக் ரகத்தின் முன்னாலேயே தனது கழுத்தை வெட் டிக்கொள்ளப் போனார்.

அப்போது காளிதேவியே அவர் கண்முன்னால் தோன்றினாள்.

பெரும் அலைகளுக்கும், கொடும் புயற்காற்றிற்கும், ஈடு கொடுத்து எதிர்நீச்சலிட்டு கடற்கரையை அடையும் மரக்கலம் போலவும்—காடு அழித்து நாடு செய்வது போலவும்— பலகாலம் பாடுபட்டு நீண்ட தொலைவிலுள்ள ஆற்றில் கால்வாயை வெட்டி, அதன் மூலம் தனது வரண்ட நிலத்துக்கு நீர் பாய்ச்சும் உழவனைப் போலவும்—ஸ்ரீராமகிருஷ்ணரின் கடுமையான தவம் ஒருநாள் பலித்தேவிட்டது!

**தே**வியைக் காண்பதற்காக அவரது ஆன்மிக வாழ்க்கையில் ஏற்பட்ட புயல், பூகம்பம், சூறுவளிச் சுழற்காற்று, காட்டாற்று வெள்ளம், ஓங்கியடித்து அலைக்கழித்து திக்குமுக்காடச் செய்த கடல் அலைகள்—அத்தனையும் ஓய்ந்து முடிந்தது. ஒரே அமைதி!

தேவி இப்போது அவர் முன்னால் புன்முறுவல் பூத்தபடி நின்று கொண்டிருந்தாள்!

காளிதேவியின் தரிசனம் ஸ்ரீராமகிருஷ்ணருக்கு கிடைத்தது. தேவியின் தரிசனம் தனக்கு 'உண்டு, இல்லை என்ற இரண்டில் ஒன்று' முடிவு காண விரும்பியவருக்கு, தேவியே காட்சி தந்து முடிவு தந்துவிட்டாள்!

**அ**தன்பிறகு, ஸ்ரீராமகிருஷ்ணரின் முன்னால் தேவி வரவும் போகவும் ஆரம்பித்தாள். தேவியையை அவர் நேருக்கு நேராகக் கண்டு பேசினார். விக்கிரகமாக மட்டுமே இதுவரையில் இருந்த தேவி, இப்போது பேசவும் செய்கிறவள் ஆகிவிட்டாள். காளிதேவி நடந்து செல்வதை அவர் பார்த்தார். கரிய கூந்தல் விரிந்து காற்றிலே பறக்க, தேவி ஆலயத்தின் கட்டிடங்களின்மேல் ஏறி நின்று, கங்கையையும் சுற்றியுள்ள இடங்களையும் பார்த்து ரசிப்பதை ஸ்ரீராமகிருஷ்ணர் பார்த்து ரசித்தார். தேவி நடந்து செல்லும்போது, அவள் அணிந்திருந்த சலங்கை ஒலி அவரது காதிலே பட்டது. அவள் சில சமயங்களில் முணுமுணுக்கிற பாடல்கள் அவரது காதில் விழும். தேவியோடு பேசிக் கொண்டே அவரும் நடந்து சென்றார். அப்படி நடந்து செல்லும்போது, குழந்தையைப் போல தேவி அணிந்த ஆடையின் நுனியைப் பிடித்துக் கொண்டு சென்றார். அவளது ஆடையின் நுனியைப்பிடித்துக்கொண்டேகுழந்தையைப்போல அவளைச் சுற்றிச்சுற்றி வந்து அவளிடம் விளையாடினார். தேவி தனது தீங்குரலில் பேசிய கிள்ளைமொழிகள் அவரது காதில் அமுத வெள்ளமாகப் பாய்ந்து அவரை ஆனந்தப்பட வைத்தன. தேவி நம்மைப் போலவே மூச்சு விடுகிறாளா என்பதைத் தெரிந்து கொள்வதற்காக, அவளது மூக்கின் அருகில் தனது கையைக் கொண்டுபோய் வைப்பார். தேவியின் மூச்சுக் காற்று அவரது கையில் பட்டது. அதைத் தெரிந்து கொண்டதிலே இப்போது அவருக்கு ஓர் ஆனந்தம்.

**தே**வியே ஓடிவந்து ஸ்ரீராமகிருஷ்ணரின் முன்பு ஒளிமயமாக நின்றாள். ஒளியாகப் பரவி ஒளி அலைகளிலே ஸ்ரீ ராமகிருஷ்ணரை மூழ்க வைத்து ஆனந்தத் தாலாட்டுப் பாடினாள். அனைத்துத் திருவிளையாடல்களையும் ஆடிக் காட்டினாள்.

தெய்வத்தையே தனது முன்னால் கொண்டு வந்து நிறுத்தி விட்டார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். உலகத்தின் அன்னையை நேருக்கு நேராகக் காண முடியும், நேருக்கு நேராக அவளிடம் பேசமுடியும்—என்பதை எல்லாம் உலக மக்களுக்கு அவர் நிரூபித்துக் காட்டி விட்டார்.

''அம்மா...காளீ...மகமாயீ...'' என்று கதறிக் கதறி, அவளுக்காக ஏங்கி ஏங்கி...ஓ....அவள் ஓட்டமாக ஓடிவந்து உன் முன் நின்று.... பேசி...சிரித்து...நீ, ஓ... ஸ்ரீராமகிருஷ்ணரே தேவியின் செல்லக்குழந்தையாகவே ஆகி விட்டீர்களே!

வாழ்க்கையில் காளிதேவியான உலக அன்னையைப் பாவை மூலம் வழிபட்டபோது, மிகப் பெரிய அற்புதங்களையே ஸ்ரீ ராமகிருஷ்ணர் நிகழ்த்தி விட்டார்.

சிரித்தது சிலை!
பேசியது பதுமை!
விளையாடியது விக்ரகம்!

உலக ஆசைகளாகிய பேய் பிடித்தவர்களுக்கு உயிரற்றதாகத் தோன்றும் சிலை வடிவத்திலுள்ள தேவி, ஸ்ரீராமகிருஷ்ணரின் முன்னால் தன்னுடைய உண்மையான சொரூபம் விளங்க நின்றாள். காளியுடன் அம்மா! என் அம்மா! என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கொஞ்சினார், விளையாடினார், ஆடினார், பாடினார். அவருக்கு அவளே எல்லாமுமானாள். தோழனாய், தாயாய், தந்தையாய், சேவகனாய், அரசனாய், சீடனாய், சற்குருவாய், ஆண்டானாய், குழந்தையாய் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு காளிதேவி விளங்க ஆரம்பித்து விட்டாள்.



# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

**ஜூன் 30**

**சுவாமி துரியானந்தர்:** ''யாருமே அவனை (ஆண்டவனை) விரும்பவில்லை. மனிதர்களின் விருப்பம் தங்கள் துயரம் தீர்ந்து, சௌக்கியமாக வாழ வேண்டும் என்பதுதான். அவனிடம் அஹைதுகி (காரணமற்ற) பக்தி கொள்வது மிகவும் சிரமமானது. தனிமைக்காக ஏங்கி அழுது கொண்டிருந்த ஒருவரை எனக்குத் தெரியும். ஆனால் ஒருநாள் அவர், ''நான் மறுபடியும் கல்யாணம் செய்து கொள்ளட்டுமா?'' என்று கேட்டார்.

**ஜூலை 1**

**சுவாமி துரியானந்தர்:** ''சுவாமிஜி (விவேகானந்தர்) 'நான்' என்று சொல்லும்போதெல்லாம், அவர் அனைத்தையும் தழுவும் அந்த ஒரு 'நானில்' ஐக்கியப்பட்டே பேசுவார். நாம் 'நான்' என்று சொல்லும்போது சரீரம், இந்திரியங்கள், மனம் ஆகியவைகளோடு நம்மை ஒன்றுபடுத்திக்கொண்டே பேசுகிறோம். அதனால்தான் 'தாசனான நான்', 'பக்தனான நான்' என்றெல்லாம் சொல்ல வேண்டியவர்களாக இருக்கிறோம். சுவாமிஜியோ 'நான்' என்பதை ஆத்மனின் வெளிப்பாடாகிய எந்த அம்சத்தோடும் ஒன்றுபடுத்தமாட்டார். அவர் பிரமத்துடனேயே தம்மை ஐக்கியப்படுத்தி, சரீரத்தையும் மனதையும் புத்தியையும் கடந்து செல்வார். இதுவே அவரது மையமான, சஹஜமான நிலையாக இருந்தது. தமது பொழுதில் பெருமளவை அவர் இந்த நிலையிலேயே கழித்தார். ஆனால் இப்படிப்பட்ட நிலை நமக்கு வருவதில்லை. நாம் இறைவனிடமிருந்து பிரிந்தே வாழ்கிறோம். அதனால்தான் இறைவனைக் குறித்து 'நீ', 'உனது' என்றெல்லாம் சொல்ல வேண்டியவர்களாக இருக்கிறோம்.''

**சீடர்:** ''பெரிய (விசுவாகாரமான, அகண்டமான) 'நான்' என்பதை உணர வேண்டுமானால், துவைதமாக சாதனை செய்பவர்கள் அத்வைத நூல்களைப் படிக்க வேண்டுமா?''

**சுவாமி துரியானந்தர்:** ''குருமகராஜ் சொல்வார்: 'அனைத்தும் ஒன்றே என்ற அறிவை உன் சொந்த அனுபவமாக்கிக்கொண்டு, அதன்பிறகு உனது விருப்பப்படி எதை வேண்டுமாயினும் செய்' என்று. உண்மையான பக்தர்கள் எப்போதும் 'நீ', 'உனது' என்றேதான் (பகவானிடம்) சொல்கிறார்கள். அதாவது 'ஹே பிரபோ! நீயேதான் அனைத்தும்; அனைத்தும் உன்னுடையதே' என்கிறார்கள். இதற்கும் அத்வைதத்துக்கும் ஏதாவது வித்தியாசம் இருக்கிறதா, என்ன? ஆனால் பகவானிடமிருந்து தனித்து சுதந்திரமாகத் தான் இருப்பதாக ஒரு பக்தன் நினைக்கும்போது, 'நான்', 'எனது' என்பவைகளை வலியுறுத்திக்கொண்டே இருந்தால், அது மிகவும் தீமை பயக்கும் துவைதமாகும். இப்படிப்பட்ட பக்தன் மகா மோகத்தில் ஆழ்ந்து விடுவான். குருமகராஜ், 'நானில்லை, நானில்லை' 'நீ, நீ தான்' என்பதைத் திருப்பித் திருப்பிச் சொல்வார். 'நான் உன் பணியாள், நான் உன் பணியாள்' என்பார். பக்தனானவன் 'நான்' 'எனது' என்பனவற்றை அறவே துறக்க வேண்டும். ராமப்பிரசாதர் எத்தனை தடவைகள் தெய்விக அன்னையிடம் அன்புச் சண்டை போட்டார்! கெஞ்சினார்! தாஜாசெய்தார்! அப்படிப்பட்ட இறுகிய ஆன்மிகநிலையை—தண்ணீர் பனிக்கட்டியாக இறுகுவது போன்ற அடர்ந்த நிலையை—அனுபவித்தாக வேண்டும். அப்போதுதான் இறைவனின் திவ்யரூப தரிசனங்கள் பெறலாம். கோபாலர்மா* தன் பின்னாலேயே, தனக்காகக் கண்ணன் சுள்ளிகள் பொறுக்கி வருவதைப் பிரத்தியட்சமாகக் கண்ணாலேயே கண்டிருக்கிறாள்; ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம்முடனேயே ராமலாலா* சஞ்சரிப்பதைப் பிரத்யட்சமாகக் கண்டிருக்கிறார். நம்முடைய உணர்வின் அடர்த்தி ஒன்றே பலனளிப்பது. நீ அவனை உருவமாகக் கொள்கிறாயா, அருவமாகக் கொள்கிறாயா என்பது விஷயமல்ல. (எப்படிக்கொண்டாலும் ஆழந்து நினைக்க வேண்டியதே முக்கியம்.) 'ஏ தாமரையே! உன்னுடைய

---

* ஸ்ரீ ராமகிருஷ்ணரின் பெண்-சீடர்களில் ஒருவர். பாலகோபாலனின் தரிசனத்தை இடைவிடாமல் பெற்று வந்தவர்.

* ராமலாலா என்ற குழந்தை ராமன் விக்கிரகத்தை ஸ்ரீ ராமகிருஷ்ணர் சிறிது காலம் வழிபட்டு வந்தார்.

அன்பு எந்த ரகத்தைச் சேர்ந்தது? நீ உன் கண வனுகிய சூரியனுக்கு உன் சிரிப்பை மட்டுமே கொடுக்கிருய். ஆனுல் உன் தேனையோ வண் டுக்குத் தருகிருயே!' ஒருவன், இறைவனே சர்வ மும் என்று கருதுவானுகில் உலகியல் விஷயங் களில் எப்படி இன்பம் காண முடியும்?''

**ஜூலை 3**

**சுவாமி துரியானந்தர்:** விலங்கினம் மானுட இனம் இரண்டுக்குமே உண்பதும், உறங்குவ தும், அஞ்சுவதும், மைதுனமும் பொதுவான அம்சங்களாகும். மனிதனின் சிறப்பு யாதெனில், அவனுக்கே நல்லது கெட்டதைச் சீர்தூக்கிப் பார்க்கிற விவேகம், அறிவு இருக்கிறது. மனி தன் எவ்வளவுக்குக் கீழ்நிலையில் இருக்கிருனே, அவ்வளவுக்கு அவன் இந்திரிய விஷயங்களில் அதிக இன்பம் காண்கிருன். எவ்வளவுக்கு உயர் நிலையில் இருக்கிருனே, அவ்வளவுக்கு அறிவில் (விவேகத்தில்) அதிக ஆனந்தம் காண்கிருன். இந்த சூட்சுமமான ஆனந்தத்தை தாழ்ந்த இயல்பினர் புரிந்துகொள்ள முடியாது. பார், இவர்கள் எப்படி வாழ்நாளை எல்லாம் குடிப்ப திலும், வேட்டையாடுவதிலும், பெண்களின் பின் ஓடுவதிலும் கழிக்கிருர்கள் என்று—மிரு கங்கள் போல! மனிதனுகப் பிறந்தும் நமது ஆற்றல்களைப் பக்குவப்படுத்தி மேம்பாடு அடையா விட்டால் என்ன பயன்? பக்குவமான மனம் பெற்றவர்கள் இம்மாதிரி (நீசமான) விஷயங்களுக்கு வளையவே மாட்டார்கள்.

''மேல்நாட்டுக்குப் போகவா நீ ஆசைப்படு கிருய்? மனதை பஹிர்முகமாகவே (வெளியுலக விஷயங்களில்) அலையவிட்டு என்ன பயன்? தியா னத்தில் உள்ளடங்கி, இறைவனில் உன்னை இழந்துகொள். ஐந்து ஆண்டுகள் நீ குருமக ராஜின் தியானம் ஒன்றிலேயே ஈடுபட்டிருந் தால் வெகு நன்ருக இருக்கும். அதன்பிறகு மேல்நாடும் நம் நாடும் ஒன்ருகவே தெரியும்.

'சரித்திரம் முதலான எந்த விஷயத்தையுமே நான் செல்லாக்காசாகக்கூட மதிக்கவில்லை— கடவுளே (எனக்கு) ஸர்வமும்' என்பது எத் துணை உயர்வான வாசகம்? . . சச்சிதானந்தப் பிரவாகத்தின்மீது அகம்பாவம் என்ற கழி கிடக் கிறது. அதனுல் பிரவாகம் பிரிவுண்டதுபோல் காண்கிறது. ஆசைகளே அகம்பாவத்தை உண் டாக்குகின்றன. ஆசைகளே நம்மை ஆண்ட வனிடமிருந்து அப்பாற்படுத்தி வைத்துள்ளன. ஆனுல் ஒருநாள் நாம் எல்லா ஆசைகளையும் அறவே நீக்கி அவனையே அழைக்கும்படியாக இருக்கும். அவனைப் பிரார்த்திப்பதிலேயே இந்த உடல் அழிந்தால்தான் என்ன?

''ஒருவன் எத்துணை பெரியவனுக இருப்பினும், என்னென்ன பெருஞ்செயல்கள் சாதித்தாலும், ஒருநாள் அவன் ஆசையற்றவனுக ஆகத்தான் வேண்டும். அதன்பின்னும் அவன் ஈச்வர சங் கல்பத்தினுல் மறுபடி கர்மங்கள் புரிய வேண்டி யிருக்கலாம். (ஆனுல் அது வேறு விஷயம்.) உனது நலனையே கோரும் ஒரு மகாபுருஷரிடம், மெய்ப்பொருளை உணர்ந்தவரிடம் நீ உன் சக லத்தையும் சரணுகதி செய்துவிட்டு, அவரது ஆணைக்கிணங்கவே கர்மம் புரிவாயாகில், அந் தக் கர்மமானது உன்னுடைய (சம்சார) பந் தத்தை மேலும் இறுக்காது; மாருக, அது பந் தத்தை உடைக்கவே செய்யும். அவனை மறவா திருப்பதையே எந்நாளும் அவனிடம் பிரார்த் தித்து வா. 'உன்னை நான் மறக்கும்படி செய் யும் எந்தவித கர்மத்தையும் எனக்குத் தராதே; நீ என்னை எங்கே வைத்திருந்தாலும் நான் எப்போதும் உன்னை நினைத்திருப்பேனுக!' என்று வேண்டிக்கொள்.

''ஆனுல், 'எனக்கு இதைத் தா; இதைத் தராதே' என்றெல்லாம் இறைவனிடம் வேண் டாதே. இது சுயநலமான பிரார்த்தனையாகும். நீ ஒன்றை செய்ய விரும்புகிருய், இன்னென் றைச் செய்ய விரும்பவில்லை என்னும்போது, அதில் உன் அகம்பாவத்தையே நுழைய விடு கிருய். சிலருக்கு வேலை என்ருலே பிடிப்பதில்லை, அதைத் தவிர்க்க முயற்சிக்கிருர்கள். இதனுல் அவர்களுடைய பந்தமும் அகம்பாவமும் நிரந் தரமாக்கப்படுகின்றன. பக்தி வேண்டும் என்றே இறைவனை வேண்டு. ஆனுல் எப்போதும் அவன் கட்டளைக்குக் கீழ்ப்படியத் தயாராயிரு. 'எப் பேர்ப்பட்ட நிலைகளிலும் உன்னை என் மனதே வைத்திருக்கச் செய்! உன் அடியாரன்றி வேறெ வர் சங்கத்திலும் நான் ஒருபோதும் விழாதிருப் பேனுக' என்று பிரார்த்தனை செய்.''



# தாயுமானர்

## திருமுருக கிருபானந்தவாரியார்

காட்டாறுகள் பெருக்கெடுத்து ஓடும்; சிலமணி நேரத்திலேயே வற்றி வரண்டும் போகும். இது போல, சில பாடல்கள் தமிழகத்தில் எங்கும் முழங்கும்; பின்னர் அவை, இருந்த அடிச்சுவடு கள்கூட இல்லாமல் மறைந்து போகும்.

ஆனல் அனுபூதிமான்கள் பாடியருளிய அருள் ஞானப் பாடல்களாகிய செந்தமிழ் வெள்ளம், கங்கா நதியின் பெருவெள்ளம்போல் இடை யிடின்றித் தமிழகத்தில் ஓடிக் கொண்டிருக்கும். இத்தகைய அருள்ஞானப் பாடல்கள் பாடி யருளிய வித்தகச் சிவானுபூதிச் செல்வர்களுள் தலைசிறந்தவர் தாயுமானர்.

இப்பெருந்தகையார் நம் பொருட்டுப் பாடியரு ளிய சிவஞானச் செந்தமிழ்ப் பாடல்கள், நம் அகத்திருளைப் போக்கும் செங்கதிர் போலவும், நம்து மனஅழுக்கை மாற்றும் ஞானத் தண் ணீர் போலவும் உதவிபுரிந்து கொண்டிருக்கின் றன.

வானளாவிய மதில்கள் சூழ்ந்த ஓர் அரண் மனைக்குச் செல்ல வேண்டுமானல், அதற்கு முகப்புவாயில் எங்கே என்று அறிந்து அந்த வாயில் வழியே செல்வதுதான் அறிவுடைமை யாகும். இதுபோல முக்தி வீடு செல்ல விரும்பு வோர் அதற்கு வாயில் எது என்று சிந்தித்து உணர்தல் வேண்டும். ''இதுதான் வாயில்; இந்த வழியே செல்லுங்கள்; சென்று முக்தி வீட்டில் ஞானச் சிங்காதனத்தில் வீற்றிருக்கும் பரம்பொருளைக் காணலாம்; கண்டு பேரின்ப வெள்ளத்தில் முழுகலாம்'' என்று நமக்கு உப தேசிக்கிறர் தாயுமானர்.

புகைவண்டியில் பிரயாணம் செய்பவர்களுக்கு, அந்த இலாகா அதிகாரிகள் வெளியிட்ட கால அட்டவணை (கைடு) உதவுவதுபோல, அனுபூதி மானகிய தாயுமானருடைய அருள் திருவாக்கு கள் நமது பரகதிப் பிரயாணத்துக்கு உதவுகின் றன.

''நான் அறிவாளி; இந்த அட்டவணையை நம்பமாட்டேன்'' என்றல் புகைவண்டிப் பிர யாணம் சுகமாக நடைபெறுமா? சிந்தித்துப் பாருங்கள். அதைப்போல அறிவாளிகளுக்கும் அனுபூதிமான்களின் உபதேச மொழிகளே இன்றியமையாத் துணை செய்கின்றன.

முக்திக்கு வாயில் இது என்று அறியாது மயங் கித் தயங்கிய சிலர், வெறும் வறண்ட பக்தி நெறியில் நின்றர்கள். சிலர் நவகண்ட பூமியை வலம் வந்தார்கள். சிலர் கடலில் முழுகினர் கள். சிலர் நதிகளில் முழுகினர்கள். சிலர் பசி தாகங்களைத் தாங்கிக்கொண்டு நெருப்புக்கு இடையில் நின்றர்கள். சிலர் உதிர்ந்த சருகு களை மட்டும் உண்டார்கள். சிலர் தண்ணீரை மட்டும் பருகினர்கள். சிலர் வாய் பேசாது மௌனமாகவே இருந்தார்கள். சிலர் மலைக் குகையில் வசித்தார்கள். சிலர் பத்து நாடிகளை யும் தூய்மை செய்து, மூலக்கனலை யோக நெறி யால் எழச்செய்து, மதிமண்டலத்தில் சேர்ந்து அங்கே வழிந்துவரும் அமுதை உண்டார்கள். இந்த அற்ப உடல் கற்பகாலம்வரை நிற்கும் படி எண்வகைச் சித்திகளும் செய்தார்கள். இத்தனை உபாயங்களால் முக்தி பெற்றர் களில்லை. இவை யாவும் முக்திக்கு வாயில்கள் ஆகமாட்டா. அம்மம்மா! எத்தனை இடர்கள்! எத்தனை பெரிய சித்திகள்; இத்தனை செய்தும் பயன் இல்லையா? ஆ! ஆ! வேறு எதுதான் முக் திக்கு வாயில்?

''குருநாதா! முக்திக்கு வாயில் எது? எங்கள் அருள் தாகம் தீர உபதேசியுங்கள்'' என்று சீடர்கள் விரும்பிக் கேட்டார்கள். தாயுமானர் உபதேசிக்கிறர்:

''ஞானம் ஒன்றுதான் முக்திக்கு வாயில். இதனை ஐயந்திரிபு இன்றித்தெளிந்து தேர்ந்து உணர் மின்கள்.''

இந்த ஞானம் என்பது, பல கலைகளைக் கற்பத ஞல் வரும் கலைஞானம் அன்று; கலை ஞானம் அபரஞானம் எனப்படும். அது அன்று முக்தி வாயில். திருவருளால் கைகூடும் அனுபவ ஞான மாகிய பரஞானம் ஒன்றே முக்திக்கு வாயில். இந்த ஞானங்களைப் பற்றித் தெய்வப்புலமைச் சேக்கிழார் பெருமான் கூறியருளியிருக்கிறர்.

''உவமையிலாக் கலைஞானம்;
உணர்வரிய மெய்ஞ்ஞானம்''

இந்த இரு ஞானங்களும் கைவரப்பெற்றவர் தாயுமானப் பெருந்தகையார். இவர் கூறும் அரிய அருள் வாக்கு இதோ:

பத்திநெறி நிலைநின்றும் நவகண்டப் பூமிப்
பரப்பை வலமாகவந்தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடை
மூழ்கியும்
பசிதாகம் இன்றி எழுநா
மத்தியிடை நின்றும் உதிர் சருகுபுனல்
வாயுவினை
வன்பசி தனக் கடைத்தும்
மௌனத் திருந்தும் உயர் மலைமுழை தனிற்
புக்கு
மன்னுதச நாடி முற்றும்
சுத்திசெய்தும் மூல ப்ராணனே டங்கியைச்
சோமவட் டத்தடைத்தும்
சொல்லரிய அமுதுண்டும் அற்பவுடல்
கற்பங்கள்
தோறும் நிலைநிற்க வீறு
சித்திசெய்தும் ஞானம் அலதுகதி கூடுமோ?
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தட்சிணமூர்த்தியே
சின்மயா னந்த குருவே!

திருமறைக்காடு என்னும் வேதாரணியத்திலே வேளாளர் திருமரபிலே வந்தவர் கேடிலியப்ப பிள்ளை. அவர் திருச்சிராப்பள்ளியில் விஜய ரகுநாத சொக்கப்ப நாயக மன்னரிடம் பெருங் கணக்கராக வேலை பார்த்தார். இவர் செய்த அரும்பெரும் தவத்தால் சிராப்பள்ளி மேவிய அராப்புனேந்த தாயான செல்வத்தின் தண் ணருளால் தோன்றினவர் தாயுமானவர். இவர் வளமை மிகுந்த இளமையில் வடமொழி, தென்மொழி என்ற இருமொழிகளையும் கற்று, நூலறிவும், மௌன குருவால் அனுபவ அறிவும் பெற்றுச் சிவஞானமூர்த்தியாக விளங்கினர்.

கணவனை இழந்த அரசமாதேவி இவரை விரும் பவும், இத்துறவரசர் அரசியை விரும்பாது, வலையிலிருந்து தப்பிய மான் கன்றுபோல் துள்ளிக் குதித்து, இராமநாதபுரத்தை அடைந்து சிவயோக சாதனையில் அசைவற நின்றார். 1662-ல் தை மாதம் விசாகத்தன்று அத்வைத முக்தி பெற்றார்.

சாத்திரமாகவும் தோத்திரமாகவும் பல அரிய பாடல்களைப் பாடியருளினர். அப்பாடல்கள் நமது பெரும் பெரும் சிக்கல்களைத் தீர்த்து உதவுகின்றன. இவருடைய பாடல்கள் தேனி னும் அமுதினும் இனியன. கனியமுதம் போன்ற சுவையுடையன. சொல்லழகு, நடையழகு, தொடையழகு, பொருளாழம் முதலிய பல நலங்களை உடைய அற்புதத் தமிழ்.

ஒருசமயம் இவரிடம் தீராத வழக்கு ஒன்றைக் கொண்டு வந்து இரண்டு கட்சியினர் அணுகி ஞர்கள். இருசாராரும் நன்கு படித்தவர்கள். இல்லறம் சிறந்தது என்பது ஒரு கட்சி; துற வறம் சிறந்தது என்பது மற்றொரு கட்சி.

''அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை'' என்று திருவள்ளுவர் திருமொழியை எடுத்துக்கூறி, இல்லறம்தான் உயர்ந்தது என்று வாதம் புரிந் தார் ஒருவர்.

''அறந்தான் இயற்றும் அவனிலும்
கோடி அதிகம் இல்லறம் துறந்தான்''

என்ற பட்டினத்துச் சுவாமிகள் திருவாக்கைக் காட்டித் துறவறமே மிக உயர்ந்தது என்று வாதிட்டார் மற்றொருவர்.

இந்த வாதங்களைக் கேட்ட தாயுமானுர் புன் னகை புரிந்தார். ''நீங்கள் பம்பரம் ஆடுவதைப் பார்த்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஆம், பார்த்திருக்கிறோம்.''

''பம்பரத்தை ஆட்டிவிட்டு ஒரு சிறுவன் தண் ணீர் குடிக்க வீட்டுக்குள் சென்றான். அவ் வழியே வந்த ஓர் அறிஞன் பம்பரம் ஆடுவதைப் பார்த்தான். 'ஆ! ஆ! என்ன வியப்பு! பம்பரம் தானே ஆடுகிறது. ஆட்டுவான் இன்றியே ஆடு கிறது. இது இயற்கை' என்றான். இப்படிச் சொல்லிய ஒருவனை அறிஞன் என்று ஒப்புக் கொள்ளலாமா? பம்பரம் ஆடுவது இயற் கையா? இல்லை. ஆட்டுவான் இன்றிப் பம்பரம் தானே ஆடுமா? ஆடாது. அதுபோல் அம்பரங் கள் அனைத்தையும் பம்பரம்போல் ஆட்டுகின் றான் இறைவன். அவனருளால் கதிர், மதி, அணு, உலகம் முதலிய அனைத்தும் இயங்கு கின்றன. எல்லாவற்றையும் இயக்குவதால் இறைவன் இயவுள் எனப்பெற்றான். 'பெரும் பெயர் இயவுள்' என்கிறார் நக்கீரர்.

'' 'என் செயல்' என்று கூறுவது பிழை. எல் லாம் அவன் செயல். எல்லாம் திருவருளின் செயல் என்று உண்மையில் உணர்ந்து திருவரு ளில் அடங்கி நிற்கின்ற நிலை எய்துமேல் இல் லறம், துறவறம் இரண்டுமே உயர்ந்தனதான்.''

''சாட்டையில் பம்பர சாலம் போல் எலாம்
ஆட்டுவான் இறையென அறிந்து நெஞ்சமே

தேட்டமொன்றற அருட்செயலில் நிற்றி [யேல்
விட்டறந் துறவறம் இரண்டும் மேன்மையே'

என்று தாயுமானுர் எளிதாக இந்தப் பெரும் பிரச்னையைத் தீர்த்தருளினுர்.

''பார்க்கின்ற மலரூடு நீயேயிருத்தி;
அப்பனிமலர் எடுக்க மனமும் நண்ணேன்''

என்கிருர். எல்லாம் இறைவனது வடிவாகக் காண்கிருர்.

''ட''—கல்லாதவன் இந்த எழுத்தைக் கோடு என்பான். கற்றவன் 'ட' என்ற எழுத்து என் பான். அதைப் போலவே ஞானிகள் எல்லாவற் றையும் சிவமாகப் பார்க்கிருர்கள். கல்லாதார் தெய்வத் திருவுருவங்களைக் கல்லென்றும் செம் பென்றும் காண்கிருர்கள்.

திவ்வியப் பார்வைபெற்ற தாயுமானுர் காட் டிய செந்நெறியில் சென்று அன்பர்கள் முக்தி நலத்தைப் பெறுவார்களாக.



**அற்புதத் திருவந்தாதி விளக்கம்**

# நல்லோரை மருவுதலும் அல்லோரை ஒருவுதலும்

வாகீசகலாநிதி **கி. வா. ஜகந்நாதன்**

இறைவனுடைய நினைவு நம் உள்ளத்தில் எப் போதும் இருக்க வேண்டும். அப்படி இருந்தால் நாம் எந்தத் தவறும் செய்யமாட்டோம். மனம் அப்படி ஒன்றையே உறுதியாக எண்ணி நிலை பெறும் ஆற்றலுடையதன்று. அது வாயுவின் அம்சம். ஆதலின் எப்போதும் சலித்துக் கொண்டே இருக்கும். நாம் இறைவனை நினைந் தும் இறைவன் புகழைப் பேசியும் இறைவன் வழிபாட்டில் ஈடுபட்டும் வாழ வேண்டுமானுல், நாம் அவ்வாறு செய்யவேண்டும் என்று விரும்பி முயற்சி செய்தால் மட்டும் போதாது. பல காலத்து வாசனைகள் நம்மைப் பல திசைகளில் இழுக்கும். ஆதலால் நம்முடைய முயற்சிக்கு உறுதுணையாக இறைவனுடைய அடியார்களின் கூட்டத்தில் நாம் சேரவேண்டும். சாது சங்கந் தான் ஒருவனை எளிதில் நல்ல வழியிலே நடப்ப தற்குத் துணை செய்யும். மனிதன் சமுதாயத் துக்குள் வாழ்கிறவன். தன்னையறியாமலே சுற் றுச் சூழ்நிலைக்கு ஏற்ப அவனுடைய பழக்க வழக் கங்கள் மாறிவிடும். ஓநாயால் வளர்க்கப்பட்ட பையன், மனித இனத்தில் சேர்ந்த பிறகும் ஓநாயைப் போலவே உணவுண்ணுதல் முதலிய வற்றைச் செய்து வந்தான் என்ற செய்தியை முன்பு பத்திரிகையில் படித்திருக்கிறேம்.

ஆகையால் பெரியவர்கள், நாம் உய்யவேண்டு மானுல் சாது சங்கத்தில் சேர வேண்டுமென்று வற்புறுத்துகிருர்கள். ''சார்பினுற் சார்பு கெட ஒழுகின்'' என்று வள்ளுவரும் சொல்கிருர். அன்பர்களோடு சேர்ந்து பழகினுல் நாமும் அவர்களைப் போல ஆகிவிடுவோம். அவர்கள் சேர்ந்துள்ள சூழலில் நம்மை அறியாமலே அவர்களுடைய பழக்க வழக்கங்களை நாமும் மேற்கொள்ளத் தொடங்குவோம்.

விடியற்காலையில் எழுந்து பழக்கமில்லாதவன் ஒருவன். அவன் நல்லோர் குழுவில் சேர்கிருன். அவர்கள் விடியற்காலையில் நான்கு மணிக்கே எழுந்து நீராடி இறைவனை வழிபடத் தொடங்குகிறவர்கள். அவன் உறங்கினுலும் அவனிடம் உள்ள அன்பினுல் அவர்கள் அவனை எழுப்புவதில்லை. என்ருலும் அவன் விழித்துக் கொள்கிருன். பழைய பழக்கத்தினுல் படுக்கை யில் கிடந்தாலும், எல்லோரும் எழுந்துவிட்ட பிறகு தான் படுக்கையில் இருப்பது முறை யன்று என்று நினைக்கிருன். அவன் மனச்சாட்சி உறுத்துகிறது. மெல்ல எழுந்து உட்காருகிருன்; மறுபடியும் படுத்துக் கொள்கிருன். இரண்டு, நாள் இப்படிச் செய்தபிறகு மூன்ருவது நாள் எழுந்தவன் படுப்பதில்லை. எழுந்து நீராடப் போகிருன். அந்த நேரத்தில் அவன் நீராடிப் பழக்கம் இல்லை. என்ருலும் அவன் நீராடு கிருன். நாளடைவில் அவன் மற்றவர்களைப் போலவே செய்யத் தலைப்பட்டு அவர்களில்

ஒருவன் ஆகிவிடுகிறான். அவனிடம் இருந்த மாறான பழக்கங்கள் மாறி நல்ல பழக்கங்கள் வந்து விடுகின்றன.

சார்பினுடைய பலத்தில் வெறும் ஜடப்பொருள்களே தம்முடைய போக்கிலிருந்து மாறுகின்றன. ரெயில் வண்டி வேகமாக ஓடும்போது, கீழே கிடக்கும் சருகிலைகள் அதனோடு சிறிது தூரம் பறந்து ஓடுகின்றன. தண்ணீரில் ஆழும் கல் மிதக்கும் கட்டையின் மேல் இருந்தால் ஆழ்வதில்லை. ஜடப்பொருளுக்கே சார்ந்த சார்பினால் இயல்பு மாறுமென்றால் அறிவுள்ள மக்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. அதனால்தான் தாயுமானவர், ''இறைவனே, நான் பேரின்பப் பெருவாழ்வைத் தேடிப்போய் அடையும் ஆற்றல் இல்லாதவன். என்னை அன்பர் கூட்டத்தில் சேர்த்து அவர்களுக்குத் தொண்டு செய்கின்ற நிலையில் என்னை வைத்தருள். அப்போது அந்தப் பேரின்பப் பெருவாழ்வு என்னை தேடிக்கொண்டு வரும்'' என்று சொல்கிறார்.

''அன்பர் பணி செய்ய எனை ஆளாக்கிவிட்டு
விட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே''

என்பது அவரது திருவாக்கு.

சாது சங்கத்தில் சேர்ந்திருப்பது மட்டும் போதாது; அல்லாதவர்களுடைய சங்கத்தினின்றும் விலகி நிற்க வேண்டும். பயிருக்கு உரம் போடுவது மட்டும் போதாது; களையும் எடுக்க வேண்டும். நல்லவர்களோடும் அல்லாதவர்களோடும் அடுத்தடுத்துப் பழகினால் ஒரு பயனும் உண்டாகாது. நல்லோர் இணக்கத்தினால் உண்டாகும் நற்பயனை அல்லாதவர் இணக்கம் அழித்து விடும்; தீய பயனை உண்டாக்கும். பயிருக்கு வேலியிட்டு மாடு முதலியவை வராமல் பாதுகாப்பதுபோல நாம் நம்மைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்.

நல்லோர் இணக்கமும் அல்லாதாரோடு சேராமையும் நன்னெறியில் நாம் செல்வதற்கு இன்றியமையாதவை. சாது சங்கமும் சாதுக்களல்லாதாரோடு இணங்காமையும் நம்மிடம் நற்பண்புகள் வளரவும் தீயபண்புகள் நெருங்காமல் இருக்கவும் வகை செய்யும்.

இந்த இரண்டையும் எண்ணுகிறார், காரைக்கால் அம்மையார். நல்லோரிணக்கமும் அல்லாதாரோடு கூடாமையும் வேண்டும் என்பதை தம் நெஞ்சுக்கு அறிவுறுத்துவாரைப் போலச் சொல்கிறார்.

'ஏ, அறியாமை நிறைந்த நெஞ்சமே! நீ இறைவனை மீட்டும் மீட்டும் எண்ணி அவன் திருநாமத்தைச் சொல்ல வேண்டும்' என்று தொடங்குகிறார். மனதை உருவுடையதாகக் கருதி அதற்குக் கை கால் வாய் முதலியன இருப்பது போலச் சொல்வது கவிமரபு. தமக்குத் தாமே சொல்ல வேண்டுவதை மனதைப் பார்த்துச் சொல்வதுபோலச் செல்வார்கள். இங்கே மட நெஞ்சைப் பார்த்துப் பேசும் அம்மையார், ''மட நெஞ்சே, மீட்டும் மீட்டும் நீ அவன் நாமத்தையும் புகழையும் வாயாலே சொல்லு; எண்ணு'' என்கிறார்.

**மறித்தும் மடநெஞ்சே! வாயாலும் சொல்லிக் குறித்து**

நெஞ்சு நினைப்பதற்குரியது. நினைப்பது போதாது. வாயாலும் சொல்ல வேண்டும்; மறுபடியும் தியானிக்க வேண்டும். குறித்தல்—தியானித்தல்.

இப்படி வாயினால் பலகால் சொல்லியும் மனதினால் நினைத்தும் இறைவனை வழிபட்டாலும், மனம் சில சமயங்களில் நெறிகெட்டுப் போய் விடும். அதற்கு ஒரு பாதுகாப்பு வேண்டும். அந்தப் பாதுகாப்புத்தான் அடியார் உறவு. அதைச் சொல்கிறார். 'நெஞ்சே, நீ வாயால் சொல்லித் தியானித்தால் மட்டும் போதாது. உன் நிலை உறுதிப்படாது. உறுதிபெற வேண்டுமானால் இறைவனைத் தொழுவதோடு நின்றால் பயனில்லை. உலக வாசனை உன்னை இழுத்துக் கொண்டு போய்விடும். ஆகையால் தொண்டர்களை நாடிச்சென்று அவர்களோடுகூடி அவர்களைப் பணிந்து தொழு; பணிவிடைகள்செய். அப்போது அவர்கள் நிலையாகப் பற்றிய வழிபாட்டு முறை உன்னிடத்தில் வலிமை பெறும்' என்று விரித்து உணரும்படி அவர் சொல்கிறார்.

**மறித்தும் மடநெஞ்சே, வாயாலும் சொல்லிக் குறித்துத் தொழு தொண்டர் பாதம்**

இது இறைநெறியால் மேலும் மேலும் ஆக்கம் பெறுவதற்குரிய முறை. இப்படிச் செய்தாலும் போதாது. அழிவு வராமல் பாதுகாக்க வேண்டும். நிரம்பிய செல்வத்தைப் பெற்று அதை ஒரு கோட்டைக்குள் சேமித்து வைத்தவர்கள், பகைவர் முற்றுகையிடாமல் அந்தக் கோட்டையைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். விளக்குத் திரியிட்டு எண்ணெயிட்டு ஏற்றியாயிற்று. அதைப் பெருங்காற்று வீசி அணைக்காத

படி பாதுகாத்துக்கொள்ள வேண்டும். அந்தப் பாதுகாப்பை இனிச் சொல்ல வருகிறுர்.

இறைவனை எண்ணுதவர்களோடு சேர்வதை விலக்க வேண்டும். அவர்களோடு சேர்வதால் மறுபடியும் மனம் அவர்கள் போகும் வழியைச் சார நினைக்கும். குடத்தில் எவ்வளவு தண்ணீர் ஊற்றினுலும் அது ஓட்டையுடையதாக இருந்தால் அதன் வழியே போய்விடும்; குடத்தை நிரப்ப இயலாது. ஆகவே, அஸாதுக்களுடைய சங்கத்தைச் சேராமல் இருக்கவேண்டும். இறைவனை எண்ணுதவர்களுடைய கூட்டத்தினின்றும் விலகி நிற்க வேண்டும். நெஞ்சுக்கு இந்த உபதேசத்தை அம்மையார் சொல்கிறுர்.

**உள்ளாதார் கூட்டம் ஒருவு**

உள்ளாதார்—எண்ணுதவர்கள், யாரை எண்ணுதவர்கள்? இறைவனை எண்ணுதவர்கள். இங்கே இறைவனைப் பற்றிச் சொல்கிறுர்.

சிவபெருமான் தனக்கெனச் சிறப்பான சில அடையாளங்களை உடையவன். சந்திரன் தக்கனுடைய சாபத்தால் தேய்ந்து கொண்டிருந்தான். அவனுக்கு அருள்புரிந்து பிறையைத் தன் திருமுடியில் தரித்துத் தேயாமலும் வளராமலும் இருக்கச் செய்தான். இறைவனுடைய திருமுடியில் அந்தப்பிறை சிறிய கண்ணிபோல விளங்குகிறது. வேறு யாரும் சந்திரனைக் காப்பாற்றவில்லை. அவன் இன்னலை எண்ணி யாரும் அவனை ஏற்கவில்லை. இறைவனே அவனை ஏற்றுக்கொண்டு குறுங்கண்ணி போலத் திருமுடிமேல் வைத்துக்கொண்டான்.

**குறித்து ஒருவர்**
**கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி கொண்டார்**

என்று சிவபெருமானை இனம் காட்டுகிறுர். அடைக்கலம் புகுந்தவரை ஆட்கொள்ளும் பெருமான் அவன். 'அவனிடத்தில் உள்ளம்வைத்து எண்ணுதவர் கூட்டத்தை நீங்குவாயாக' என்று நெஞ்சுக்கு உபதேசிக்கிறுர். துஸ்ஸங்கத்தைச் சேராமல் இருக்க வேண்டும் என்பதைப் பிற அருளாளர்களும் வற்புறுத்துகிறுர்கள்.

''திருவே, வெருவிப்
பிறிந்தேன் நினது பெருமைஎண் ணுத
கருமநெஞ்சால்
மறிந்தே விழும்நர குக்குற வாய
மனிதரையே''

என்று அபிராம பட்டர் அம்பிகையினிடம் சொல்கிறுர். துஸ்ஸங்கத்தைக்கண்டு பயந்து பிரிந்து விட்டாராம்.

ஆகவே, இறையருள்பெறும் நெறியில் போகப் புகுந்தவர்களுக்கு இன்றியமையாத வலிமை நல்லோர் இணக்கம்; தளர்ச்சியின்றி அந்த நெறியிற்செல்லப் பாதுகாப்பாக இருப்பது அல்லாதார் கூட்டத்தினின்றும் விலகியிருத்தல்,

**மறித்தும் மடநெஞ்சே, வாயாலும் சொல்லிக்**
**குறித்துத் தொழு தொண்டர் பாதம்;—**
**குறித்து ஒருவர்**
**கொள்ளாத திங்கட் குறுங்கண்ணி**
**கொண்டார்மாட்டு**
**உள்ளாதர் கூட்டம் ஒருவுர்**

[அறியாமையையுடைய நெஞ்சே, இவனைக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணி யாரும் ஏற்றுக்கொள்ளாத சந்திரனைக் குறுங்கண்ணியாக திருமுடியிலே வைத்துக்கொண்டவரை மீட்டும் மீட்டும் வாயினுலும் புகழ்பாடித் தியானித்து, அவருடைய தொண்டர்களின் திருவடிகளைத் தொழுவாயாக; அவரை எண்ணுதவர்களின் கூட்டத்தினின்று நீ விலகி ஒழுகுவாயாக.

மறித்தும்—மீட்டும்; வாயாலும் என்று சொன்னது நெஞ்சால் நினைப்பதற்கு மேலும் என்னும் பொருளுடையது; எச்சவும்மை குறித்து—தியானித்து; ''குறியைக் குறியாது குறித்து'' என்பது **கந்தர் அநுபூதி.** குறித்து—சந்திரனுடைய அவல நிலையை எண்ணி ஒருவரும் என்பதில் உள்ள உம்மை தொக்கது. திங்களாகிய குறிய கண்ணி; கண்ணி—தலையில் சூடும் மாலை. கொண்டார் மாட்டு—கொண்டாரை; உருபு மயக்கம். ஒருவு—நீங்கு.

தொண்டரை . மீட்டும் மீட்டும் வாயால் புகழ்கூறி அவர்களை எண்ணி நாடிச்சென்று அவர்கள் பாதத்தைத் தொழு' என்னும் பொருள் கொள்ளலாம்; குறித்து என்பதற்கு அவர்களை நாடி என்று பொருள் கொள்க.]

நல்லோரின் இணக்கமும் அல்லோரை நீங்குதலும் இறைவன் அருளைப்பெறும் உபாயங்கள் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் 40—ஆவது பாட்டு.



# சுவாமி பிரேமானந்தரின் போதனைகள்

தமிழாக்கம்: 'அண்ணு' என். சுப்பிரமண்யம்

மிகுந்த கவனத்துடன் இருங்கள். ஸ்ரீராமகிருஷ்ணரை உங்களுடைய இலட்சியமாக வைத்துக் கொள்ளுங்கள். இந்த இலட்சியத்தைக் கொண்டால் உங்களுக்கு புதிய ஒரு வலிமை வரும். நமது குருநாதர் எல்லா சக்திகளுக்கும் உறைவிடமாக இருந்தார். தூய அன்னையும் குருதேவரும் ஒன்றே ஆவர். சுவாமி விவேகானந்தரும் குருதேவருடன் ஒன்றுபட்டவரே.



சுவாமி பிரேமானந்தர்

ஞான நூல்களைத் தினந்தோறும் படியுங்கள். எல்லோரிடமும் நாராயணனைக் கண்டு பேசிப் பழகுங்கள். நீங்கள் அன்னையின் குழந்தைகள். நீங்கள் ஏன் பயத்தையோ கவலையையோ அடைய வேண்டும்? யாருடைய அருளைப் பெற்றிருக்கிறீர்கள் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளவில்லையா? எல்லாம் வீண், அர்த்தமற்றது என்று நினைக்கிறீர்களா? அப்படியல்ல, பிள்ளைகளே! அன்னையின் அருளால் நீங்கள் ஏற்கெனவே விடுதலை அடைந்து விட்டீர்கள்.

ஒவ்வொரு திசையிலிருந்தும் இப்பொழுது பணியாட்கள் தேவை. உலகில் சாந்தியைப் பரப்ப உங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்யுங்கள். உங்களுடைய முயற்சியால் ஆசிரமக் கட்டிடங்கள் எழுப்பப்பட்டிருப்பது பாராட்டத்தக்கது. ஆனால் அதே சமயத்தில், உங்களுடைய பக்தியும் தியானமும் பற்றின்மையும் திட நம்பிக்கையும் வளர வேண்டும். இல்லாவிட்டால் வெளிப்படைச் சாதனைகள் மேலும் மேலும் பந்தத்தையே வளர்ப்பனவாகும்.

நீங்கள் ஒவ்வொருவரும் தூய அன்னையிடம் உபதேசம் பெற்றிருக்கிறீர்கள். உங்கள் வீட்டையும் உற்றார் உறவினரையும் துறந்துவிட்டு வந்திருக்கிறீர்கள். உங்களுடைய ஒரே நோக்கம் திடநம்பிக்கையையும், பக்தியையும் ஞானத்தையும் அன்பையும் அடைய வேண்டும் என்பதுதான். என்றாலும் நீங்கள் மூவரும் ஒற்றுமையுடன் சமரசமாக வாழ முடியவில்லை என்பது மிகவும் வருந்தத்தக்கது. இந்துக்களும், முஸ்லிம்களும், பௌத்தர்களும், கிறிஸ்தவர்களும் சமரசப்பட்டு ஒன்றுசேர வேண்டும் என்பதெல்லாம் வெறும் பேச்சளவில்தானா? அந்த இலட்சியம் முழுமனதுடன் உள்ளங்கனிந்து விரும்பப்படுவது அல்லவா? தூய அன்னையை தரிசித்து நாம் அடைந்த நன்மை என்ன? அவருடைய அதிசய வாழ்க்கையினின்று நீங்கள் என்ன கற்றுக்கொண்டீர்கள்?

சூரியன் உதித்தால் இருள் அகல்வதைப் போல, கடவுளின் தரிசனத்தால் குறைபாடெல்லாம் நீங்குகிறது. அஞ்ஞானத்தையும் அகங்காரத்தையும் போக்கி உள்ளத்தில் அன்பையும் பக்தியையும் உதிக்கச் செய்ய வேண்டாமா? நீங்கள் அன்னையைப் பார்த்திருப்பதால் மாசற்றவர்களாவீர்கள் என்று திடமாக நம்புங்கள்.

நீங்கள் மூவரும் சமரசமாக வாழ முடியவில்லையே! உங்கள் அகங்காரத்தையும் கர்வத்தையும் விட முடியவில்லையே! அன்பில் மூழ்கி உங்களை மறக்கவில்லையே! உங்களுடைய தாழ்ந்த அகத்தை அழிக்காமல் கடவுளைக் காண விரும்புவது எங்ஙனம்? அதேசமயத்தில் கடவுளை வழிபடுவதாகவும் அந்த வழிபாட்டு முறையில் மனித உலகிற்குச் சேவை செய்வதாகவும் நீங்கள் எண்ணுகிறீர்கள். வெட்கமாயில்லையா? உள்ளத்தில் உண்மையான அன்பு இல்லாத

போது படிப்பும் பூஜையும் சேவையும் எல்லாம் வீணே.

'ஆண்டவனுடைய பக்தர்கள் அனைவரும் ஒரே குலம்' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறினர். மானிட வர்க்கம் முழுவதையும் அந்த ஒரு குலத்தினராக ஒன்று சேர்ப்பதே நமது இலட்சியம்.

எனது குழந்தைகளே! பாருங்கள்! வழி தெளிவாகத் தெரிகிறது. நீங்கள் இளைஞர்கள். உங்கள் மனம் உலகத் துன்பத்தால் கடினமாகிவிடவில்லை. ஆண்டவனைக்காண உள்ளம் கசிந்து கண்ணீர் விடுங்கள். முழுமனதுடன் பிரார்த்தனை செய்யுங்கள். அவர் வழிகாட்டுவார், அழைத்துச் செல்வார். ''நான், எனது'' என்ற அபிமானத்தை விட்டு விடுங்கள். ஆண்டவனுடைய அருளால் நீங்கள் அனைவரும் முழுமனதுடன் ஒன்றுபட வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன்; அவர் உங்களுக்கு நேர்மையான அறிவை அளிக்க வேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகிறேன்.

இக்கடிதத்தை நான் உங்களில் ஒருவருக்காக மட்டும் எழுதவில்லை. எல்லோருக்குமாகவே எழுதுகிறேன். உங்களிடம் எனக்குக் கோபம் இல்லை. யாரிடமும் எனக்குக் கோபம் இல்லை. நீங்கள் அனைவரும் எனது அன்புக்கு உரியவர்கள். இதை உங்களுடைய நன்மைக்காகவே எழுதுகிறேன்.

உள்ளத்தில் அன்பு உதிக்கும்போது அங்கே ஆனந்தம் நிரம்புகிறது. பிறருடைய குற்றம் குறைகளைப் பார்க்காதீர்கள். அனைவரிடமும் நல்லதையே பாருங்கள். எல்லோரையும் நேசித்துப் போற்றுங்கள். பாரநகர் மடத்தில் நாங்களெல்லாரும் அப்படித்தான் வாழ்ந்தோம். ஒருநாள் நரேந்திரனைக் காணவிட்டால் நாங்கள் அவரைப் பார்ப்பதற்காகக் கல்கத்தாவுக்கு ஓடுவோம். என்ன அன்பு, என்ன ஆர்வம்—இறுதி மூச்சுவரை—நரேன் எங்கள்மீது கொண்டிருந்தார்! இப்பொழுது அது கனவு போலாகிவிட்டது. ராக்காலிடமும் (சுவாமி பிரம்மானந்தர்) தான் என்ன அன்பு! மடத்தைவிட்டு அவர் எங்காவது போக எண்ணினால்கூட எனக்கு இதயம் சூனியமாய்விட்டதைப்போல் தோன்றுகிறது.

எதையாவது பற்றிக்கொள்வது மனதினுடைய இயல்பு. கடவுளையும் அடியார்களையும் பற்றிக் கொள்ளச் செய்வதுதான் உத்தமம். நீங்கள் வீட்டைத் துறந்துவிட்டவர்கள். அடியார்கள் தான் இப்பொழுது உங்கள் உறவினர்கள். இப்படி வாழ்வதுதான் சரணாகதியும் மனதின் ஒருமைப்பாடுமாகும். அன்பில் உங்களை மறந்து விடுங்கள். அன்பைப்பருகி மெய்மறந்த நிலையை அடையுங்கள். அன்பில் மூழ்கி 'நான், எனது' என்பதை மறந்து விடுங்கள். குறுகிய, சிறிய 'நான்' அழிந்தால் அளவு கடந்த ஆன்மா தானாகவே விளங்கும், ஆனந்தம் பொங்கி எழும்.

நீங்கள் எனக்கு மிக நெருங்கியவர்கள். ஆகவே தான் உங்களுடைய நன்மைக்காக நான் உங்களைக் கடிந்து கொள்ளுகிறேன். எவரையும் நான் வேறாக எண்ணவில்லை. அன்பினால் உலகனைத்தையும் அணைத்துக்கொள்ள நான் விரும்புகிறேன். நீங்களும் உலகம் முழுவதையும் உங்களுக்குச் சொந்தமாக்கிக்கொள்ள வேண்டும்.



இறைவா! வேதங்கள் உம்மை அறிந்ததில்லை. பிரம்மனோ, விஷ்ணுவோ மற்றும் கடவுளர்களோ கூட உம்மை அறியவில்லை. அவர்களது தலைவனோ அல்லது தலைசிறந்த யோகிகளும்கூட உம்மை அறிந்தார்களில்லை. உமது பக்தன் ஒருவனே உம்மை அறிவான். எனவே எம்பெருமானே! நான் உம்மைச் சரணடைகிறேன்.

—ஸ்கந்த புராணம்.

முக்தியில் உனக்கு விருப்பம் இருக்குமானால், விஷயங்களை விஷத்தைப் போல வெகு தூரத்தில் தூக்கித் தள்ளிவிடு. அமிர்தத்தைப் போல திருப்தி, இரக்கம், பொறுமை, நேர்மை, மனவமைதி, புலனடக்கம் ஆகியவைகளை எப்போதும் பரிவுடன் கைக்கொள்வாயாக.

—விவேகசூடாமணி.

இறைவனின் திருவடிகளை என் தலையில் தரித்துக்கொள்வேன். மனதில் அமர்த்துவேன். அவனே தலைவன் என்று பாடுவேன். பல மலர்களையிட்டு வணங்குவேன். நின்று ஆடுவேன். ஆடியபின் தேவர்களின் தலைவன் என்று சிந்தனை செய்வேன். இவையே நான் அறிந்தவை ஆகும்.

—திருமூலர்.

# சிந்தனைச் சோலை

## 1. தொண்டின் உயர்வு

அபுபென் ஆதம் என்ற ஒருவர் இருந்தார். கடவுளிடம் பெரிதும் பக்தி பூண்டவர் அவர். அதோடு கடவுளின் அடியார்களுக்கும் பொது மக்களுக்கும் தொண்டு செய்வதில் அபாரமான ஈடுபாடு அவருக்கு இருந்தது.

ஒருசமயம் அவர் தூக்கத்தில் நல்ல ஒரு கனவு கண்டார். கனவு முடியும்போது துக்கம் கலைந்தது.

கண் விழிந்தெழுதவர் அதிசயம் ஒன்று கண்டார். அவரது அறையில் ஒளிக் கிரணங்களால் சூழப்பெற்ற தேவதை நின்று கொண்டிருந்தது. அது தனது கையில் ஏதோ ஒரு புத்தகத்தை வைத்து எழுதிக் கொண்டிருந்தது.

ஆச்சரியம் பொங்க, 'தாங்கள் என்ன எழுதிக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டார் அபுபென்.

தெய்வம், ''பக்தர்களின் பெயர்கள் அடங்கிய பட்டியல் இது'' என்று சொன்னது.

ஆர்வத்துடன், 'தனது பெயர் அதில் இருக்கிறதா?' என்று பார்த்துச் சொல்லும்படி விண்ணப்பித்துக் கொண்டார் அபுபென்.

தெய்வம், கையிலிருந்த அட்டவணையை நோட்டம் விட்டது. 'இல்லை' என்று சொல்லியது.

அபுபென் சொன்னார்: ''மனித குலத்தை நேசிக்கும் அபுபென் ஆதம் என்று எனது பெயரையும் அதில் குறித்துக்கொள்ளும்படி வேண்டுகிறேன்.''

தெய்வம் எதையோ குறித்தவாறு மறைந்துவிட்டது.

மறுநாள், அத்தேவதை ஒரு பட்டியலைக் கொண்டு வந்து அபுபென்னிடம் காட்டியது. அதில் அவரது பெயர் முதலாவதாகக் குறிக்கப் பட்டிருந்தது.

## 2. விவேகானந்தரின் அறவுரை

சுவாமி விவேகானந்தர் பேலூரில் உள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் தங்கியிருந்தார். அப்போது அவரைக் காண்பதற்காகச் சீடர் ஒருவர் வந்திருந்தார். சுவாமிஜியின் அறையில் அப்போது, ஒருசிலநாட்களுக்கு முன்பு வந்திருந்த (Encyclopaedia Brittania) பிரித்தானியக் கலைக் களஞ்சியத் தொகுதிகள் வைக்கப் பட்டிருந்தன.

கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் அச்சிடப்பட்டிருந்த அந்த அழகான பெரிய பெரிய புத்தகங்கள், சுவாமிஜியின் அறையில் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்ததை சீடர் கவனித்தார்.

சுவாமிஜியிடம் உரையாடும்போது சீடர், ''ஒருவர் தம்முடைய வாழ்நாளில் இந்தப் புத்தகங்கள் எல்லாவற்றையும் படித்து முடிப்பது என்பது இயலாத காரியம்'' என்று சொன்னார்.

சுவாமிஜி அத்தருணத்தில் ஏற்கனவே பத்துத் தொகுதிகளைப் படித்து முடித்திருந்தார். பதினோராவது தொகுதியைப் படிக்கவும் ஆரம்பித்திருந்தார். ஆனால் அது சீடருக்குத் தெரியாது.

சீடர் சொன்னதைக் கேட்ட சுவாமிஜி, ''என்ன நீ அப்படி சொல்கிறாய்? முதல் பத்துத் தொகுதிகளில் என்ன கேள்வி வேண்டுமானாலும் கேள். நான் பதில் சொல்கிறேன்'' என்று சொன்னார்.

சுவாமிஜியின் கேள்வி சீடரைத் திகைக்க வைத்தது. அவருக்கு ஆச்சரியம் தாங்கமுடியவில்லை. வியப்புடன் அவர், ''அப்படியானால் தாங்கள் இந்தப் புத்தகங்களை எல்லாம் படித்து முடித்துவிட்டீர்களா?'' என்று கேட்டார். யாருக்குமே தோன்றக்கூடிய நியாயமான கேள்விதான் அது.

சுவாமிஜி, ''படிக்காமல் உன்னை கேள்வி கேட்கச் சொல்வேனா?'' என்றார்.

பிறகு சுவாமிஜியைச் சீடர் கேள்விக் கணைகள் தொடுத்துப் பரிசோதித்துப் பார்த்தார். சுவாமிஜி மிக நுட்பமான கருத்துகளை எல்லாம் தெளிவாகப் புரிந்துகொண்டிருந்ததுமட்டுமில்லாமல், பல இடங்களில் புத்தகங்களிலிருந்த வாக்கியங்களை வரிக்குவரி அப்படியே எடுத்துச் சொன்னார்.

சீடர் அயர்ந்து போய்விட்டார். புத்தகங்களை அவர் மூடிவைத்துவிட்டு, ''இது மனித ஆற்றலினால் முடியாத காரியம்'' என்றார். அப்போது அவரது குரலில் வியப்பு தொனித்தது.

அதற்கு விடையாக சுவாமிஜி கூறிய வாசகங்கள், இன்றைய சமுதாயம் தன் நெஞ்சில் பதித்து வைத்துக்கொள்ளத் தக்கனவாக விளங்குகின்றன. அவை வருமாறு:—

''வழுவாத பிரம்மசரியத்தைக் கைக்கொண்டு ஒழுகுவதால், எல்லாக் கலைகளையும் மிக விரைவிலேயே கற்றுவிடலாம். ஒருவன் ஒருமுறை கேட்பவைகளையும் பிழையில்லாமல் நினைவில் நிலைத்து வைத்துக்கொள்ளக்கூடிய ஞாபகசக்தியும் ஏற்படுகிறது. இத்தகைய பிரம்மசரியம் இல்லாமல்போனதால்தான், நமது நாட்டில் எல்லாமே அழிவடைந்துவிட்டன.''

—சத்திய காமன்



# பரமார்த்தப் பிரசங்கம்

**சுவாமி விரஜானந்தர்**

259. ஏதோ பலனை உத்தேசித்தும் ஆசையைப் பூர்த்தி செய்து கொள்வதற்காகவும் செய்யப்படும் (ஸகாம உபாசனை) வழிபாடானது, தன்னையே உபாசித்துக்கொள்வதே ஆகும். பகவானை வழிபடுவது ஆகாது.

தொல்லைகளிலிருந்தும் நோயிலிருந்தும், துரதிருஷ்டமான நிலைமையிலிருந்தும், ஆபத்துக்களிலிருந்தும், இல்லாமை, துக்கம், பயம், கவலை, பிரிவாற்றுமை ஆகியவைகளிலிருந்தும் இவை போன்ற பல துன்பங்களிலிருந்தும், விடுபடுவதற்காக, பகவானை வருந்தி அழைப்பது சுயநலத்தையே கருதியும், சுய லாபத்தைப் பெருக்குவதையே எண்ணியும், சுய வசதியை ஆக்கிக் கொள்ளவும், சுய அனுகூலத்தை வளர்த்துக்கொள்ளவுமேதான் ஆகும்.

புண்ணிய ஸ்நாநம், தான தர்மம், புற வழிபாடு (பாகிய பூஜை) சமயச் சடங்குகள், பண்டிகைகள், விரதம் இருத்தல், உபவாசம் இருத்தல், யாகங்கள், பிராயச்சித்த கர்மங்கள், நலத்தை அடைவதற்காகவும் இனிவர இருக்கும் கேடுகளை அகற்றுவதற்காகவும் செய்யப்படும் கிரியைகள், புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை செய்தல், சாது சேவை, சண்டி பாராயணம், கீதை பாராயணம்—ஆகிய காரியங்கள் பூர்வ பாவங்களைப் போக்கிக் கொள்வதற்கும், புண்ணியத்தைச் சேகரித்துக் கொள்வதற்குமான செய்கைகள் ஆகும். அவை ஆசையால் தூண்டப்படுவன. இத்தகைய அனுஷ்டானங்கள் நியமங்கள் எல்லாவற்றின் நோக்கமும் பாப க்ஷயமும் புண்ணிய லாபமுமே ஆகும்.

பழைய பாவங்களை ஒழிப்பது என்பது என்ன தெரியுமா? அது பாவப்போக்கை அல்லது, பாபப் பிரவிருத்தியை அடியோடு துடைத்து விடும் முயற்சியைக் குறிக்காது. ஆனால் ஏதோ ஒரு சுலபமான வழியில், முன் செய்த தீவினைகளின் தவிர்க்க முடியாத தீயவிளைவுகளாக வர இருக்கும் நரக வேதனை அல்லது துக்க அனுபவத்தில் இருந்தும் தப்பித்துக்கொள்ளும் இச்சையே ஆகும். புண்ணியப் பலனைச் சேகரித்துக் கொள்வதனுடைய நோக்கமும் என்ன தெரியுமா? இந்தப் பிறவியில் உறவினர்களோடும் குழந்தை குட்டிகளோடும் குடும்பத்தினரோடும் சுகமாகவும் வசதியாகவும் வாழ்வதும் பிறகு மறுமையில் சொர்க்கத்தில் குன்றாத சுகத்தை அனுபவிப்பதும் ஆகும்.

இந்த இரண்டு ஆசைகளும் மனதின் பிரமையே ஆகும். வீணான ஆசையே ஆகும். துக்கம் கலவாத சுகம் என்பது இந்த உலகத்தில் இல்லை. தீராத சுகம் என்பது சொர்க்கத்தில் இல்லை. இவைகள் எல்லாம் சாஸ்திரங்களில், வேதங்களில், புராணங்களில் சொல்லப்பட்டுள்ள அர்த்தவாதங்கள் மட்டுமே ஆகும். வெறும் புகழுரைகளே ஆகும். ஆறுதல் மொழிகளே ஆகும். தூண்டுதலுக்கான ஊக்க வார்த்தைகளே ஆகும். வெறும் கற்பனைக் கதைகளே ஆகும். தர்ம கர்மங்களை, சமயக் கடமைகளை, நல்ல காரியங்களைச் செய்வதில் சிறிதும் உள்ளப்போக்கு இல்லாதவரை ஆசை வார்த்தை சொல்லி ஊக்கி விடுவதற்காகவே இவைகளைச் சித்தரித்துச் சொல்லியிருக்கிறார்கள். ''ஒரு சிறிது மட்டுமே நீ செய்தாயானால் கோடி மடங்கு பலன் உனக்கு வந்து சேரும்'' என்று பேசியிருக்கிறார்கள். தாய் ஒருத்தி, தனது குழந்தையைப் பால் குடிக்க வைப்பதற்கு விசித்திரமான கதைகள் சொல்லி அதற்கு வேறு போக்குக் காட்டுவதைப் போலவும், அல்லது தாலாட்டுப் பாடி அதைத் தூங்கச் செய்வதை போலவும்தான் இது. நோக்கம் நல்லதுதான். சந்தேகமே இல்லை. காரியமும் சாதிக்கப்படுகிறது.

260. அப்படியானால் மேலே குறிப்பிட்ட உபாசனை வகைகளையும் மதச் சடங்குகளையும் சமயக் கிரியைகளையும், ஆசையால் தூண்டப்பட்டவைகள் என்ற காரணத்தால் நாம் விட்டு விட வேண்டுமா? அவைகளைச் செய்ய வேண்டாம் என்று நான் தடை செய்கிறேனா என்ன? அல்லவே அல்ல. எதுவரையில் உங்கள் மனப்போக்கு அவைகளை நோக்கிப் பாய்கிறதோ,

அது வரையில் அவைகளை எல்லாம் செய்யுங்கள். நன்ருகச் செய்து வாருங்கள். இந்தக் கிரியை கள் உள்ளத்தை விசாலப்படுத்த உதவுகின்றன. நல்ல சிந்தனையின் மூலமும், நல்ல காரியங் களின் மூலமும் சத்துவ உணர்வும், புனிதப் போக்கும் ஏற்படுகின்றன. தர்ம அனுஷ் டானங்களிலும் சுயநலமற்ற கைங்கரியத்திலும் நம்பிக்கையும் கவர்ச்சியும் உண்டாகின்றன. ஆனல் ஒன்றை நினைவில் வைக்கவேண்டும். இந்தக் கிரியைகள் எல்லாம் வேத விதிகளே யானுலும், இவைகள் கர்ம காண்டத்தைச் சேர்ந்தவைகள். சமயச் சடங்குகளையும் யாக காரியங்களையும் பற்றிச் சொல்லும் வேதப் பகுதியைச் சேர்ந்தவைகள். அவைகள் பக்தி ஆகாது.

உண்மையான பகவத் பக்தியிலே வாங்குவதும் விற்பதும் இல்லை. வியாபார விவகாரம் இல்லை. பேரம் பேசுவது இல்லை. லாப நஷ்ட கணக்கு எடுப்பதில்லை. கர்ம பலன்களுக்கான இச்சை இல்லை. உடல், உள்ளம், உயிர் ஆகியவைகளை யும் ஏன், மற்ற எல்லாவற்றையுமே இதய நாதனுகிய பகவானுக்குப் பரிபூரணமாக அர்ப் பணம் செய்துவிடுவது ஒன்றுதான் பக்தியில் இருக்கும் விஷயமாகும். அங்கு பகவானின்மீது அன்பு செலுத்துவதில் மட்டுமே பூரண திருப்தி ஏற்படுகிறது. ஏனென்ருல் ஆண்டவனை நேசிக் கும்போது, இஷ்டப்படக்கூடிய வேறு எந்தப் பொருளுமே நாடித் தேடுவதற்கான மதிப்பு உடையதாகத் தோன்றுவதில்லை. அந்த இறை நேசம் அன்புக்காகவே அன்பு கொள்வதாகும். அத்தகைய பக்தனுடைய இயல்பே பக்தி செலுத்துவதுதான். ''பகவானை நேசிக்காமல் உயிர் வாழ்வதையும் சுவாசிப்பதையும் நான் பொறுக்க மாட்டேன்'' என்பதே பக்தனுடைய முழுப்போக்கும் ஆகும்.

இந்த பக்தி இறுதி நிலையைச் சேர்ந்தது. பக்தி அல்லது பிரேமையின் மிக உயர்ந்த நிலை—பரம பக்தி, சுத்த பக்தி, நிஷ்காம பக்தி, பிரேமை பக்தி. இத்தகைய பக்தி வெகு அபூர்வமானது. ஆரம்ப நிலையிலேயே அது தானுகவே வந்து விடாது. ஆகவேதான் கர்ம காண்ட அனுஷ் டானத்தையும், வைதிபக்திப் பயிற்சியையும் சாஸ்திரங்கள் விதித்திருக்கின்றன. சிரத்தை யோடும் நம்பிக்கையோடும் கர்ம காண்ட விதி களைப் பின்பற்றி வந்தால், ஈஸ்வர கிருபை காரணமாகப் படிப்படியாக சித்த சுத்தி ஏற் படும். மனதின் மாசு கரையும். அற்பமான பலன்களைப் பெறுவதில் உள்ள இச்சை துச்ச மாகத் தோன்றலாகும். அநித்தியப் பொருள் கள்மீது வைராக்கியம் ஏற்படும். பிறகு அழி யாத (அக்ஷயமான) பரம பதத்தைப் பெறுவ தற்கு உள்ளம் பேராவல் கொள்ளும். அந்த நிலையைப் பராபக்தி என்றும் பரஞானம் என் றும் கூறுவர்.



மன்னிப்புக் கேட்பதன் மூலம் அன்பு செய்யும் குணம் உண்டாகும். அந்த குணத்தின் மூலம் அச்சம் அகலும். தூய்மை பெருகும்.

—ஜைன மதம்

கிருஷ்ண நாம சங்கீர்த்தனம் செய்யுங்கள். சதா கிருஷ்ணனின் பெயரையே சொல்லுங்கள். கிருஷ்ணனுக்கே பக்தி செலுத்துங்கள். கிருஷ்ணனைப் பற்றியே பாடுங்கள். கிருஷ்ணனைத் தவிர வேறு எதையும் நினைக்காதீர்கள். என்னிடம் உங்களுக்கு உண்மையான அன்பு இருந்தால் கிருஷ் ணனைத் தவிர வேறு எதையுமே பாடாதீர்கள். உண்ணும்போதும் உறக்கத்திலும், விழித்திருக்கும் வேளையிலும், பகலிலும் இரவிலும் கிருஷ்ணனையே எண்ணுங்கள். கிருஷ்ணனையே பாடுங்கள்.

—ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர்

ஆயிரக்கணக்கான நதிகளில் இருந்து தண்ணீர் வந்து விழுந்தாலும் சமுத்திரம் பொங்கி வழிவ தில்லை. அது எப்போதும் போலவே இருக்கிறது. அதுபோலவே ஒருவனுடைய மனதில் எத்தனை ஆசைகள் வந்து பிரவேசித்தாலும், அவற்றில் எவன் நிலைகுலையாமல் இருக்கிருனே, அந்த ஆசை களைப் பின்தொடர்ந்து எவன் செல்லாமல் இருக்கிருனே, அவன்தான் மோட்சமாகிய சாந்தியை அடைகிருன். மனதில் ஆசைகளுக்கு இடம் கொடுப்பவன் அத்தகைய சாந்தியை அடைவதில்லை.

—ஆதிசங்கரர்

# மூன்று மண்டை ஓடுகள்

விவேகானந்த தாசன்

ஒரு காலத்திலே ஒரு பெரிய ராக்ஷசன் இருந்தான். அவன் ஒருநாள் இரவு மூன்று மண்டையோடுகளை எடுத்துக்கொண்டு ஓர் அரசனுடைய அரண்மனைக்குச் சென்றான்.

அரசனிடம் அவன், ''ஏ, ராஜாவே! இதோ பார். மூன்று மண்டை ஓடுகளை நான் இப்போது கொண்டு வந்திருக்கிறேன். இந்த மூன்று மண்டை ஓடுகளில் எது மிகவும் சிறந்த மண்டை ஓடு என்று நீ பதில் சொல்லியாக வேண்டும். நீ சொல்லும் பதில் சரியாக இல்லாவிட்டால், உன்னை இப்படியே நான் என் வாயிலே போட்டுக் கரகரவென்று கடித்து மென்று தின்றுவிடுவேன்'' என்று சொல்லி அரசனைப் பயமுறுத்தினான்.

அரசனுக்கு என்ன பதில் சொல்வது என்றே புரியவில்லை. ஏனென்றால் மூன்று மண்டை ஓடுகளுமே பார்ப்பதற்கு ஒரேமாதிரியாக இருந்தன! பார்ப்பதற்கு மட்டுமல்ல, எல்லாவிதத்திலுமே அவைகள் ஒன்றுபோலவே இருந்தன. ஆதலால் அரசனால் சட்டென்று உடனே பதில் சொல்ல முடியவில்லை. சரியாக பதிலைச் சொல்லாவிட்டால் ராக்ஷசன் தன்னை விழுங்கிவிடுவானே என்று அரசன் மிகவும் பயந்துபோய் விட்டான்.

அரசன் மிரள மிரள விழித்தான். ராக்ஷசனோ, ''உம்! பதில் சொல். பதிலைச் சொல்கிறாயா, இல்லை உன்னைச் சாப்பிட்டு விடட்டுமா?'' என்று சொல்லி மிரட்டினான்.

அரசனுக்கு அப்போது நல்லவேளையாக ஒரு யோசனை தோன்றியது. உடனே, அவன், ''எனக்கு மூன்று நாட்கள் அவகாசம் கொடுங்கள். உங்களுடைய கேள்விக்குச் சரியான பதிலைச் சொல்லி விடுகிறேன்'' என்று சொன்னான்.

ராக்ஷசனும் அதற்கு ஒப்புக்கொண்டு மூன்று மண்டை ஓடுகளை அரசனிடம் கொடுத்துவிட்டுப் போனான்.

அரசனுக்கு ராக்ஷசன் வந்துபோன பிறகு தூக்கமே வரவில்லை. எப்படி வரும்? அப்போதைக்குத் தப்பித்துக்கொண்டாலும், மூன்று நாளைக்குப் பிறகு ராக்ஷசனுக்கு எப்படியும் பதில் சொல்லியாக வேண்டும் அல்லவா? சரியான பதிலைச் சொல்லாவிட்டால் ராக்ஷசன் சும்மா விடமாட்டானே!

அரசனுடைய எதிரில் மண்டை ஓடுகள் இருந்தன. அரசன் அவைகளை ஒவ்வொன்றாக எடுத்து, இப்படியும் அப்படியும் எப்படியெல்லாமோ ஆராய்ந்து பார்த்தான். அவைகள் ஒன்றுபோலவே இருந்தனவே தவிர, அவைகளில் எது சிறந்த மண்டை ஓடு என்று அரசனால் கண்டுபிடிக்கவே முடியவில்லை. எதிரிலிருந்த மண்டையோடுகளைப் பார்க்கப் பார்க்க அரசனுக்கு பயம்தான் அதிகமாகியது.

மறுநாள் அரசன் தன்னுடைய சபையைக்கூட்டி, அந்த தேசத்தில் இருந்த பெரிய பெரிய பண்டிதர்களை எல்லாம் வரவழைத்தான்.

அரசவைப் புலவர்கள் உட்பட, அன்றைய தினம் சபைக்கு ஏராளமான பண்டிதர்கள் வந்து குழுமினார்கள்.

சபையின் நடுவிலே ஒரு மேஜை இருந்தது. அந்த மேஜையின்மீது மூன்று மண்டை ஓடுகளும் வைக்கப்பட்டிருந்தன.

அரசன், சபைக்கு வந்திருந்த பண்டிதர்களைப் பார்த்து, ''அறிஞர் பெருமக்களே, உங்களுடைய உதவி இப்போது எனக்கு அவசியம் தேவைப்படுகிறது. இங்கே உங்கள் முன்னால் மூன்று மண்டை ஓடுகள் வைக்கப்பட்டிருப்பதை நீங்கள் பார்க்கிறீர்கள். இவைகளில் மிகச் சிறந்த மண்டை ஓடு எது என்று ஆராய்ந்து சொல்லும்படி வேண்டிக்கொள்கிறேன்'' என்று சொன்னான்.

மூன்றும் ஒரேமாதிரியாக இருந்த மண்டை ஓடுகளை அறிஞர்கள் பார்த்தார்கள். கைகளிலே தூக்கி வைத்துக்கொண்டு ஆராய்ந்தார்கள். ஆனால் அவர்களில் ஒருவராலுமே அரசனுடைய கேள்விக்குப் பதில் சொல்ல முடியவில்லை. 'மூன்றுமே ஒன்றாகவே இருக்கின்றன. இவைகளில் மிகச்சிறந்தது என்று எந்த ஒன்றையுமே நிச்சயம் செய்து சொல்வதற்கில்லை' என்று சொன்னார்கள்.

அனைவருமே இப்படிச் சொல்லிவிட்டதால், அரசனுக்கு ஒரே குழப்பமாக இருந்தது. பாவம் அவன் என்னதான் செய்வான்? ஆனானப்பட்ட அறிஞர்களாலேயே, மூன்று மண்டை ஓடுகளில் எது சிறந்தது என்று சொல்ல முடியவில்லையே!

அரசன் திகைத்துக்கொண்டிருந்த சமயத்திலே, சபையின் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த கிழவர் ஒருவர் எழுந்து வந்தார். அவர் தலையிலே தலைப்பாகை சுற்றியிருந்தார். கையிலே நீண்ட ஒரு கோலை வைத்திருந்தார். கொஞ்ச சிவப்பு நிறத்தில் நீண்ட அங்கியை ஆடையாக அணிந்திருந்தார். அவருடைய கண்கள் பார்ப்பதற்குப் பளபளப்பாக பிரகாசத்துடன் இருந்தன. அவருடைய முகத்திலே ஞானஜோதி வீசியது. வயது ஆகியிருந்தாலும் உறுதியான கட்டுடல் அவருக்கு இருந்தது. அந்தக் கிழவரின் பெயர் நரேந்திரர் என்பது. மகா மகா விவேகி அவர்.

கிழவர் மேஜையின் அருகிலே சென்று மூன்று மண்டை ஓடுகளையும் கூர்ந்து பார்த்தார். பிறகு அமைதியாக ஒவ்வொன்றாகக் கையில் எடுத்துப் பார்த்துவிட்டு அந்த அந்த இடத்திலேயே வைத்தார்.

பின்பு அரசனை நோக்கித் திரும்பி, ''மகாராஜாவே, ஒரு இரும்புக்கம்பி எனக்கு இப்போது வேண்டும்'' என்று சொன்னார்.

அரசன் சைகை செய்தான். உடனே ஒரு சேவகன் ஓடிப்போய் ஒரு கம்பியைக் கொண்டு வந்து கிழவரிடம் கொடுத்தான்.

சபையில் இருந்தவர்கள் எல்லோரும் கிழவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

கிழவர், கம்பியை முதலாவதாக இருந்த மண்டை ஓட்டின் காதிலே நுழைத்தார். அந்தக் கம்பி, மண்டை ஓட்டின் மறு காது வழியாக வெளியே வந்து விட்டது.

பிறகு கிழவர், கம்பியை எடுத்து இரண்டாவதாக இருந்த மண்டை ஓட்டின் காதிலே நுழைத்தார். அப்போது அந்தக் கம்பி, மண்டை ஓட்டின் வாயின் வழியாக வெளியே வந்தது!

பிறகு கிழவர், அதே கம்பியை மூன்றாவதாக இருந்த மண்டை ஓட்டின் காதிலே நுழைத்தார். கம்பி இந்தத் தடவை மண்டை ஓட்டுக்கு கீழே, அதாவது இதயத்தை

நோக்கி நேராகப் பாய்ந்து விட்டது. அந்த நிலையில் கம்பியிருப்பதே தூரத்தில் இருந்த மற்றவர்களின் கண்களுக்குத் தெரியவில்லை.

கிழவர் அரசனை நோக்கித் திரும்பி, ''மூன்றாவதாக இருக்கும் மண்டை ஓடுதான், இங்குள்ள மூன்று மண்டை ஓடுகளிலும் மிகச்சிறந்த மண்டை ஓடு'' என்று சொன்னார்.

அவ்விதம் சொல்லிவிட்டு அதற்கான காரணத்தையும் அவர் விளக்கினார். ''மனிதப் பிறவியின் ஒரேஒரு இலட்சியம் கடவுளை அடைவதுதான். மக்களுள் ஒருவகையானவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குக் கடவுளைப் பற்றிய ஞான மொழிகளை எவ்வளவுதான் எடுத்துச் சொன்னாலும், தங்களுடைய ஒரு காதிலே வாங்கி மறுகாது வழியாக அவைகளைக் காற்றிலே பறக்க விட்டு விடுவார்கள். அதாவது அவர்களுடைய உள்ளத்தில் அந்த உண்மைகள் பதிவதும் இல்லை; கடவுளை அடைவதற்காக அவர்கள் முயற்சி செய்வதும் இல்லை. முதலாவது மண்டை ஓடு அவர்களை உணர்த்துகிறது.

''மக்களுள் இரண்டாவதாக ஒருவகையினர் இருக்கிறார்கள். கடவுளைப் பற்றிய ஞானமொழிகளைக் கேட்கும் அவர்கள், மற்றவர்களுக்கு அந்த உண்மைகளை உபதேசம் செய்வதில் மிகமிக ஆர்வம் உடையவர்களாக இருக்கிறார்கள். ஆனால் அவர்களே அந்த உண்மைகளைக் கடைப்பிடிப்பதற்கு முயற்சி செய்வதில்லை. அவர்களுடைய உள்ளத்திலும் அந்த உண்மைகள் பதிவது இல்லை. பிறருக்குப் போதிப்பதிலேயே கருத்துச் செலுத்தும் இந்த வகையான மக்களை, இரண்டாவது மண்டை ஓடு உணர்த்துகிறது.

''மூன்றாவதாக ஒருவகை மக்கள் இருக்கிறார்கள். உண்மையிலேயே இவர்கள்தான் உயர்ந்தவர்கள். இவர்கள் கடவுளைப் பற்றிய உண்மைகளைக் கேட்ட உடனேயே, அப்படியே தங்களுடைய இதயத்தில் பதிய வைத்துக்கொள்கிறார்கள். பின்பு அந்த உண்மைகளை எழுத்துக்கு எழுத்து வாழ்க்கையில் கடைப்பிடிப்பதற்கு, ஒவ்வொருநாளும் ஒவ்வொரு நிமிஷமும் முயற்சி செய்கிறார்கள். இந்த வகையைச் சேர்ந்தவர்கள் சான்றோர்கள் ஆவார்கள்.

''பரமஹம்சர்களும் நல்ல உள்ளம் கொண்ட உண்மையான பக்தர்களும் இந்தப் பிரிவில் அடங்குகிறார்கள். அவர்களையே மூன்றாவதாக இங்கே வைக்கப்பட்டுள்ள மண்டை ஓடு உணர்த்துகிறது. மக்கள் ஒவ்வொருவரும் மூன்றாவது மண்டை ஓடு உணர்த்தும் உண்மைகளுக்கு ஏற்பவே வாழ வேண்டும். இதுவே மூன்று மண்டை ஓடுகளும் உணர்த்தும் நீதி ஆகும். ஆகவே மூன்றாவது மண்டை ஓடுதான் இங்குள்ள மண்டை ஓடுகளிலேயே மிகச்சிறந்த மண்டை ஓடு'' என்று சொன்னார் பெரியவர்.

அவருடைய விளக்கம் அரசனுக்குப் பரிபூரண திருப்தியைக் கொடுத்தது.

பிறகு ராக்ஷசன் வந்தபோது, அரசன் தான் பெரியவரிடமிருந்து கேட்ட உண்மைகளைச் சொன்னான். ராக்ஷசனும் அரசன் சொன்ன விளக்கத்தை மகிழ்ச்சியோடு ஒப்புக்கொண்டு போய்விட்டான்.



# விடுதலைக்கு வழி

ஓர் அரசனிடம் ஒரு மந்திரி இருந்தார். ஒரு நாள் மந்திரிமீது கோபம் கொண்ட அரசன் அவரை சிறையில் அடைத்துவிட்டான். சிறை என்ருல், நகரத்திற்கு வெளியே ஒரு கோபுர உச்சியில் அடைத்து விட்டார். இறங்குவதற் குப் படிக்கட்டுகள் கிடையாது. அங்கிருந்து தப்பிப் போகவும் முடியாது. அப்படியே அந்த மந்திரி பசியிலும் வெயிலிலும் வாடி இறந்து போகட்டும் என்று விட்டுவிட்டார்கள்.

அன்றிரவு மந்திரியின் மனைவி அந்தக் கோபுரச் சிறையின் அடிவாரத்திற்குப் போனுள். ''நான் உங்களுக்கு உதவி செய்கிறேன். என்ன தேவை சொல்லுங்கள்'' என்று கேட்டாள்.

மந்திரி அவளை மறுநாள் இரவு வரச்சொன் ஞர். அப்படி வரும்போது நீண்ட தடிய வடக் கயிறு, மெல்லிய நூல் கயிறு, பட்டு நூல், ஒரு வண்டு, கொஞ்சம் தேன் ஆகியவைகளை எல் லாம் கொண்டு வரச்சொன்ஞர்.

எதற்குக் கேட்கிருர் என்று புரியாவிட்டாலும், மந்திரி சொன்னபடியே அவர் மனைவி செய் தாள். மறுநாள் இரவு வந்ததும் கணவன் சொன்ன எல்லாப் பொருள்களையும் கொண்டு வந்தாள். மந்திரி கோபுர உச்சியிலிருந்து மனை விக்கு என்ன செய்யவேண்டும் என்று விவரித் தார். பட்டு நூலின் ஒரு முனையை வண்டின் உடலில் சுற்றிக்கட்டி, மறுமுனையை மனைவி யைப் பிடித்துக்கொள்ளச் சொன்ஞர்.

வண்டின் தலையில் தேனைத் தடவி, கோபுரத் தின் அடிவாரத்தில் நின்று கொண்டு அதை உயரப் பார்த்து பறக்கவிடச் சொன்ஞர். தேனை முகர்ந்தபடி வண்டு மேலே பறக்க ஆரம் பித்தது. எங்கோ கோபுரத்தின் உயரத்தில் தேன் இருப்பதாக நினைத்து வண்டு உயர உயர பறந்தது. வண்டு கோபுர உச்சிக்கு வந்ததும், மந்திரி அதை எட்டிப் பிடித்துக்கொண்டார். பட்டு நூலைப் பற்றிக்கொண்டார்.

கீழே இருந்த மனைவியைப் பார்த்து, பட்டு நூலின் நுனியில் கெட்டி நூலைக் கட்டச்சொன் ஞர். பிறகு அவர் பட்டு நூலை மெல்ல இழுக்க இழுக்க, கெட்டி நூல் கோபுரத்தின் உச்சிக்கு வந்தது. கெட்டி நூலின் ஒருமுனை அவர் கைக்கு வந்தது. பிறகு அதன் மறுமுனையில் தடிய வடக் கயிற்றைக் கட்டச் சொன்ஞர். இப் போது மெல்ல மெல்ல வடக் கயிற்றை மேலே இழுத்துக்கொண்டார்.

அப்புறம் என்ன? எல்லாம் சுலபமாக முடிந் தது. வடக் கயிற்றை கோபுர உச்சியில் வலு வாகக் கட்டிஞர். அதைப் பிடித்துக்கொண்டு விருவிரு என்று வேகமாக இறங்கிஞர். கோபுரச் சிறையிலிருந்து தப்பிவிட்டார் மந்திரி!

சுவாமி விவேகானந்தர் இந்தக் கதையைக் கூறிவிட்டு, ஆன்மிக விடுதலையைப் பெறுவ தற்குப் படிப்படியாக சுவாசப் பயிற்சி, நரம்பு மண்டலப்பயிற்சி, சிந்தனைப்பயிற்சி என்று பல வகைப் பயிற்சிகளாகிய படிகளில் முன்னேற வேண்டும் என்று போதிக்கிருர்.



'ஏகம் ஸத், விப்ரா பஹுதா வதந்தி.'
உண்மை ஒன்றே. அதை அறிஞர்கள் பலவிதமாய்ப் பேசுகிருர்கள். —ரிக்வேதம்.

முன்னுள் மெய்ஞ்ஞான முனிவர் தவம் ஈட்டுதல் போல்
இந்நாளிற் காண எனக்கிச்சை பராபரமே. —தாயுமானவர்.

'விஷயான், விஷவத் த்யஜ'
விஷயங்களை விஷம் போலத் துறந்து விடுக. —அஷ்டாவக்கிரர்.

கடவுள் வரையறைகளுக்கு அடங்காதவர். நாம் அவரை உணருகிருேமே தவிர அறிய வில்லை. —காந்தியடிகள்.

நல்ல வழிதனை நாடு! எந்த நாளும் பரமனை நத்தியே தேடு! வல்லவர் கூட்டத்திற் கூடு! அந்த வள்ளலை நெஞ்சினில் வாழ்த்திக் கொண்டாடு! —கடுவெளிச் சித்தர்.

# புத்தர் சொன்ன கதை

புத்தர் பெருமான் சொன்னதாகப் பல கதைகள் வழங்கி வருகின்றன. ஜாதகக் கதைகள் எனப்படும் இந்தக் கதைகளில் புத்தர், தம்முடைய முற்பிறவிகளில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறுகிறார். அவைகளுள் ஒரு கதை இங்கே கொடுக்கப்படுகிறது.

ஒரு காலத்திலே காசி நகரத்தை, பிரம்மதத்தன் என்ற ஓர் அரசன் ஆட்சி செய்து வந்தான். அவனுடைய மகனின் பெயர் துஷ்டகுமாரன். உலகிலே பலரும் தங்களுடைய பெயருக்குப் பொருத்தமில்லாத வாழ்க்கை



யைத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் அல்லவா? ஆனால் துஷ்டகுமாரன் அப்படிப்பட்டவன் அல்ல. அவன் தனது பெயருக்கு நூற்றுக்கு நூறு பொருந்தும் வகையில் துஷ்டனாகவே வாழ்ந்தான்!

துஷ்டகுமாரன் நினைத்தபோதெல்லாம் அரண்மனை அதிகாரிகளையும் பணியாட்களையும் துன்புறுத்தினான். பெரிய குடும்பத்தில் பிறந்திருந்தாலும், அந்தக் குடும்பத்திற்குரிய உயர்ந்த பண்புகள் அவனுடைய ரத்தத்திலேயே ஏனோ ஒட்டாமல் போய்விட்டன. நல்லவர்கள் உச்சரிக்கவே கூசும் தீய வார்த்தைகளை, துஷ்டகுமாரன் வெட்கமில்லாமல் தாராளமாகப் பேசுவான். வாய்கூசாமல் அவைகளைச் சொல்லிக்கொண்டே அரண்மனையில் இருப்பவர்களை அவன் அடிப்பதும் உண்டு.

அரக்க மனம் படைத்த துஷ்டகுமாரனை யார்தான் விரும்புவார்கள்? அரண்மனை அதிகாரிகளுக்கு இளவரசனின் செய்கைகள் கொஞ்சமும்கூடப் பிடிக்கவில்லை. இளவரசன் ஆயிற்றே என்று, துஷ்டகுமாரன் இழைத்த அவ்வளவு துன்பங்களையும் பொறுத்துக் கொண்டு, வாய் பேசாமல் உள்ளத்தில் வைத்துப் புழுங்கிக் கொண்டிருந்தார்கள். பாவம், அவர்களால் அப்போது வேறு என்ன செய்ய முடியும்?

ஒருநாள், துஷ்டகுமாரன் ஆற்றில் போய்க் குளிக்கலாம் என்று நினைத்தான். அவன் அரண்மனை வேலைக்காரர்களிடம், ''நான் ஆற்றில் குளிக்க வேண்டும். அதுவும் நடு ஆற்றில் குளிக்க வேண்டும். என்னை நீங்கள் அங்கே அழைத்துப் போங்கள்'' என்று கட்டளையிட்டான்.

இவ்விதம் துஷ்டகுமாரன் அட்டகாசமாகச் சொல்லிக்கொண்டிருந்த சமயத்தில் மாலை வேளை நெருங்கிக்கொண்டிருந்தது.

அரண்மனை வேலைக்காரர்களுக்கு துஷ்டகுமாரனைக் கண்டாலே பிடிக்காது. அவன்மீது அளவில்லாத வெறுப்புக்கொண்டிருந்த வேலைக்காரர்கள், இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி துஷ்டகுமாரனைத் தீர்த்துக்கட்ட முடிவு செய்தார்கள். இளவரசன் விரும்பியபடியே அவனை நடு ஆற்றுக்குக் கொண்டு போனார்கள். அந்தச் சமயத்தில் மாலை சாய்ந்து இருள்சூழ ஆரம்பித்துவிட்டது. தனியாக தங்களுடன் வந்திருந்த துஷ்டகுமாரனை நடுஆற்றில் மூழ்கும்படி செய்தார்கள். பிறகு, 'பாவி ஒழிந்தான். இனிமேல் நமக்குத் தொல்லையில்லை' என்று மகிழ்ச்சியுடன் அரண்மனைக்குத் திரும்பி விட்டார்கள்.

அரசனாகிய பிரம்மதத்தன், தன்னுடைய மகனைப் பற்றி வேலைக்காரர்களிடம் விசாரித்தான். வேலைக்காரர்கள் உண்மையைச் சொல்லவில்லை. அரசனிடம் அவர்கள் ஏதேதோ சாக்குப்போக்குகள் சொல்லி, இளவரசனைப் பற்றிய உண்மை எதுவும் அரசனுக்குத் தெரியவொட்டாமல் மழுப்பி மறைத்து விட்டார்கள்.

பிரம்மதத்தன், தன்னுடைய அதிகாரிகள் பல

ரையும் அழைத்து, 'இளவரசனை எப்படியாவது தேடிக் கொண்டுவந்து விடுங்கள்' என்று சொல்லி அவர்களைப் பல திசைகளுக்கும் அனுப்பி வைத்தான். ஆனால் அப்படிச் செய்தும் அவனுக்கு இளவரசனைப் பற்றிய தகவல் ஒன்றுமே கிடைக்கவில்லை.

அங்கே ஆற்றில் மூழ்கடித்ததால் துஷ்டகுமாரன் செத்துப்போகவே இல்லை! சிறிதுநேரம் அவன் ஆற்றில் தத்தளித்தான். பிறகு அங்கே தற்செயலாக மிதந்து வந்த ஒரு பெரிய கட்டையைப் பற்றிக்கொண்டு அதன் மேலே ஏறி உட்கார்ந்து கொண்டான்.

ஒரு காலத்தில் அதே ஆற்றின் கரையிலே ஒரு வியாபாரி வாழ்ந்து வந்தான். அவன் நாற்பது கோடி பவுன் நாணயங்களைச் சேர்த்து, யாருக்கும் தெரியாமல் அந்த ஆற்றின் கரையிலிருந்த ஓர் இடத்தில் இரகசியமாகப் புதைத்து வைத்திருந்தான்.

அந்த வியாபாரி மரணம் அடைந்த பிறகு, அதே ஆற்றங்கரையில் ஒரு பாம்பாகப் பிறக்க நேர்ந்தது! பாம்புப் பிறவியிலும் அவனுக்குப் பழைய ஞாபகம் இருந்தது. கர்மம் யாரைத் தான் விட்டது பாருங்கள்! பாம்புப் பிறவியெடுத்த நிலையில் அவன், தான் சேர்த்து வைத்த புதையலின் அருகிலேயே யிருந்து அதைக் கவனமாகப் பாதுகாத்து வந்தான்.

இந்த வியாபாரியைப் போலவே மற்ரெரு வியாபாரி இருந்தான். இந்த வியாபாரி, முப்பது கோடி பவுன் நாணயங்களை அதே ஆற்றங்கரையில் புதைத்திருந்தான். அவன் மரணம் அடைந்து, அடுத்தப் பிறவியில் ஒரு எலியாக அந்த ஆற்றங்கரையில் பிறவி எடுக்க நேர்ந்தது. எலிப் பிறவியில் அவன், தான் புதைத்து வைத்த புதையலின் அருகிலேயே வாழ்ந்து வந்தான்.

ஒருநாள் கடுமையான மழை பெய்தது. அதன் விளைவாக பாம்பின் வளையிலும் எலியின் வளையிலும் தண்ணீர் புகுந்தது. அவைகள் இரண்டும் இளவரசன் வந்துகொண்டிருந்த மரத் துண்டை அடைந்து உட்கார்ந்தன.

ஆற்றங்கரையின் அருகில் ஒரு மரத்தில் ஒரு கிளி வாழ்ந்து வந்தது. அது எப்படியோ தவறி ஆற்றில் விழ, ஆறு அந்தக் கிளியை அடித்துப் போக ஆரம்பித்தது. சிறிது தூரம் வரையிலும் சிரமப்பட்டுத் தத்தளித்த கிளி, துஷ்டகுமாரனும் பாம்பும் எலியும் உட்கார்ந்திருந்த அதே மரத்தை அடைந்து உட்கார்ந்தது.

புத்தர் பெருமான், அப்போது அந்தப் பிறவியில் ஒரு சன்னியாசியாக இருந்தார். அவர் அந்த ஆற்றங்கரையில் ஒரு சிறிய குடிசையைக் கட்டிக்கொண்டு வாழ்ந்து வந்தார்.

துஷ்டகுமாரன் உட்கார்ந்திருந்த கட்டை, போதிசத்துவரின் ஆஸ்ரமம் இருந்த பக்கமாக ஆற்றிலே மிதந்து போயிற்று. துஷ்டகுமாரன் கோவென்று கதறி அழுது கொண்டிருந்தான். இளவரசனின் அழுகுரலைக் கேட்ட (புத்த பகவானாகிய) சன்னியாசி வெளியே வந்து பார்த்தார். அவருக்கு துஷ்டகுமாரனைக் காப்பாற்றும் எண்ணம் தோன்றியது. ஆனால், வேகமாக ஆறு அடித்துச் செல்லும் கட்டைமேல் இருப்பவனைக் காப்பாற்றுவது அவ்வளவு சுலபமாக இல்லை. ஆனாலும் மனம் தளராத போதிசத்துவர், எவ்வளவோ பாடுபட்டுக் கட்டையைக் கரைக்கு இழுத்து வந்துவிட்டார்.

பிறகு நெருப்புமூட்டி துஷ்டகுமாரன், பாம்பு, எலி, பறவை ஆகியோர்களுடைய குளிரை நீக்கி உதவினார். வயிருற உணவளித்து அவர்களின் பசிப்பிணியைப் போக்கினார்.

ஆற்றிலிருந்தும் குளிரிலிருந்தும் பசியிலிருந்தும் தங்களைக் காத்தருளிய சன்னியாசிக்கு நால்வரும் நன்றி தெரிவித்தார்கள். அப்போது பாம்பு, ''ஐயா, என்னிடம் நாற்பது கோடி பவுன் நாணயங்கள் இருக்கின்றன. அவைகளைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும்'' என்று சாதுவிடம் சொல்லியது.

எலி, தன்னுடைய முப்பது கோடி நாணயங்களை ஏற்றுக்கொள்ளும்படி சன்னியாசியிடம் வேண்டியது. கிளி, சாதுவுக்கு சவ்வரிசியைத் தர முன்வருவதாகச் சொல்லியது.

இளவரசன், ''நீங்கள் எப்போது வேண்டுமானாலும் என்னை வந்து பார்க்கலாம். உங்களுக்கு வேண்டியதை என்னிடம் பெற்றுக்கொள்ளலாம். உங்களை வரவேற்று உபசரிக்க நான் தயாராகக் காத்திருக்கிறேன்'' என்று சாதுவிடம் சொன்னான்.

பிறகு நால்வரும் சன்னியாசியிடம் விடைபெற்றுக்கொண்டு, தங்களுடைய இருப்பிடங்களுக்குத் திரும்பினார்கள்.

சிலகாலம் கடந்தது. அரசன் பிரம்மதத்தன் காலமானான். அவனுக்குப் பிறகு துஷ்டகுமாரன் அரியணையேறி அரசாளத் துவங்கினான்.

ஒருசமயம் போதிசத்துவருக்கு மேலே கூறப் பட்ட நான்கு பேர்களுடைய ஞாபகம் வந்தது. அவருக்கு அவர்களிடமிருந்து பெறக்கூடியது ஒன்றுமே இல்லை. என்றாலும் அவர்கள் எப்படி யிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்வ தற்காகவும், அவர்களுடைய மன நிலையைச் சோதிப்பதற்காகவும் போதிசத்துவர் புறப்பட் டுப் போனார். பாம்பு, அவரை அன்புடன் வர வேற்று உபசரித்தது. புதையலைச் சுட்டிக் காட்டி, ''இதிலுள்ள நாற்பது கோடி பவுன் நாணயங்களையும் நீங்கள் எடுத்துக் கொள்ளுங் கள்'' என்று சாதுவிடம் சொன்னது. ஆனால், அவர் அந்தப் புதையலை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டார்.

பிறகு எலியிடமும் கிளியிடமும் சென்றார். அவைகளும் நல்லபாம்பைப் போலவே சன்னி யாசியை வரவேற்று உபசரித்து, தங்களிடம் உள்ளவைகளை ஏற்றுக்கொள்ளும்படி வேண் டின. சொன்ன சொல் தவறாமையும், நன்றி யுணர்வும் அவைகளிடம் இருந்ததை போதிசத் துவர் கண்டார். ஆனால், அவைகள் கொடுக்க முன்வந்த பொருள்களையும் ஏற்க மறுத்து விட்டு துஷ்டகுமாரனைக் காண்பதற்காக அரண் மனையை நோக்கிப் பயணமானார்.

சாதுவைக் கண்ட மாத்திரத்திலேயே துஷ்ட குமாரன் தன்னுடைய வேலைக்காரர்களைப் பார்த்து, ''இதோ, யாரோ ஒரு ஏமாற்றுப் பேர்வழி இங்கே வந்திருக்கிறான். இவனை அடித்து நொறுக்குங்கள். பிறகு கழுவில் கொண்டுபோய் ஏற்றுங்கள்!'' என்று சொன் னான்.

அரசன் சொன்னபடியே போதிசத்துவரை அரண்மனை அதிகாரிகள் சூழ்ந்துகொண்டார் கள். அவரைப் பலமாக அடிக்கவும் ஆரம்பித் தார்கள். போதிசத்துவர் பதில் ஒன்றுமே பேச வில்லை. வேலைக்காரர்கள் கொடுத்த அடிகள் அத்தனையையும் வாய் பேசாமல் மௌனமாக இருந்து அவர் பெற்றுக்கொண்டார். அப் போது ஒரே ஒருசமயம் மட்டும் அவர், ''மனி தர்களை ஆற்றிலிருந்து எடுத்து கரையேற்று வதை விடவும் மரக்கட்டையை எடுத்து கரை யேற்றுவதே மேலானது என்று அறிஞர்கள் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொன்னது மிகவும் சரி'' என்று சொன்னார்.

இப்படி போதிசத்துவர் கூறியதும், வேலைக் காரர்கள் அவரை அடித்து நொறுக்குவதை நிறுத்தினார்கள். "ஏன் இப்படிச்சொல்கிறீர்கள்? உங்களுக்கு எங்கள் அரசரை ஏற்கனவே தெரி யுமா? அவருக்கு நீங்கள் எப்போதாவது, எந்த உதவியாவது செய்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார்கள். போதிசத்துவர், தாம் ஒருசம யம் துஷ்டகுமாரனை ஆற்றிலிருந்து கரையேற்று வித்ததைச் சொல்லி, ''அதனுடைய பலனைத் தான் இப்போது நான் அனுபவித்துக் கொண் டிருக்கிறேன்'' என்று சொன்னார்.

இவ்விதம் போதிசத்துவர் சொன்னதும், அரு கிலிருந்தவர்கள் வியப்படைந்து போனார்கள். அதோடு அவர்களுக்கு அரசன்மீது கோபம் கோபமாக வந்தது. ''தன்னுடைய உயிரையே காத்த ஓர் உத்தமரை, அரசன் கழுவில் ஏற் றுங்கள் என்று கட்டளையிட்டானே! எப்படிப் பட்ட பாதகன் நமக்கு அரசனாக இருக்கிறான்! நன்றி என்பது மருந்துக்கும் இல்லாத இந்த நயவஞ்சகன், நமக்கு என்ன பெரிதாக நன் மையைச் செய்வான் என்று எதிர்பார்க்க முடியும்? இப்படிப்பட்டவனை இனியும் அரசனாக வைத்திருக்கக்கூடாது'' என்று அரண்மனையி லிருப்பவர்களே உறுதியான ஒரு முடிவுக்கு வந்து, துஷ்டகுமாரனைக் கொன்று ஆற்றில் போட்டு விட்டார்கள்.

அதோடு போதிசத்துவருக்குப் பட்டம்சூட்டித் தங்களுடைய அரசனாகவும் அரியணையில் அமர்த் தினார்கள்.

சிறிது காலம் கடந்தது. போதிசத்துவர் மீண் டும் பாம்பையும் எலியையும் கிளியையும் பார்த்து வருவதற்காகக் கிளம்பினார். பாம்பு, தான் அதுவரையிலும் பாதுகாத்து வந்த புதை யலை போதிசத்துவருக்கு மகிழ்ச்சியோடு கொடுத்தது. எலியும் அவருக்குத் தன்னுடைய புதையலை மனமுவந்து கொடுத்தது. கிளி, ''சவ் வரிசியைக் கொண்டு வந்து விடுகிறேன்'' என்று சொன்னது. அதற்குப் பதிலாக போதி சத்துவர், ''இப்போதைக்கு சவ்வரிசிக்கு அவ சியம் இல்லை. பிறகு பார்த்துக் கொள்ளலாம்'' என்று சொன்னார்.

பிறகு அவர் பாம்பு, எலி, கிளி ஆகியவைகளு டன்கூடி தமது வாழ்நாட்களை மனநிறைவோடு கழித்தார்.



# அம்மா எழுந்திடு! அருங்கண் திறந்திடு!

வே. மு. மந்திரம்
*தலைமை ஆசிரியர் : ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப்பள்ளி (மெயின்) சென்னை*

**சுவாமி விவேகானந்தர் இந்தியத் தாயோடு உரையாடி எழுப்புவது போல அமைக்கப்பட்டுள்ளது இந்தக் கவிதை**

(முன் இதழ் தொடர்ச்சி)

**எ**வ்வுயிர் களிலும் என்னைக் காண்பான்
எவ்வுயிர் களையும் என்னில் காண்பான்
எவனே அவனே மெய்யினைக் காண்பான்
என்றே கீதையி லியம்பிட விலையா
ஏன்மறந் தாயோ இவ்வுண் மையையே?
இன்றே உன்றன் குழந்தைகட் கெல்லாம்
நன்றே எடுத்து நவின்றிடு தாயே!
நன்றாய் நின்ற உன்றன் நிலையை
நாடொறும் எண்ணி நான்நை கின்றேன்
நானில முழுதும் நன்மெய்ஞ் ஞானம்
நன்கு வழங்கி நற்பெயர் பெற்றாய்
இன்றேன் மறந்தாய் நீயிஞ் ஞானம்?
எப்படிப் பெற்றா யிவ்வஞ் ஞானம்?

**ஆ**ண்டா யிரமா யுறங்கின வுறக்கம்
அம்மா உனக்கினம் போதா தோதான்
அம்மா ஒருமக னழைத்திடு கின்றேன்
அம்மா விழித்திடு! விழித்திடு! அம்மா!
இம்மா நிலமெலா மின்பம் அடைய
இன்றே விழித்துநீ எழுந்திடு தாயே!
எம்மான் இராம கிருஷ்ணன் வந்தே
உன்றன் பெருமையை யுணர்த்தின னம்மா
எப்படி யேனும் எழுப்பிடு வேன்யான்
இனியும் உனையா னுறங்கிடச் செய்யேன்

**ப**ண்டைப் பெருமை தன்னிலு மேலாய்
பார்தனில் நீயும் பெறப்போ வதையும்
பார்க்கின் றேனுளக் கண்ணா லம்மா!
போதும் எழுந்திடு! போதுமித் தூக்கம்
பரம்பொரு ளாணையும் பிறந்துவிட் டதுவே
பாரினில் உயர்ந்திட வேண்டும் பாரதம்
பாமர மக்களும் பட்டினி தீர்ந்தே
பலகலை பயின்றே நலம்பெறப் போகிறார்
உழவரும் தொழிலரும் உயரப்போகிறார்
எழுந்தே அம்மா! இன்பங் கொள்நீ
எழுந்ததான் மீக வெள்ளம் இங்கே
உருண்டே யெங்கும் வேகமாய் ஓடுது!

**எ**திர்த்திட யாரும் இவ்வுல கினிலில்
எல்லை மீறி யாவையு மீர்த்தே
எங்கும் ஓடு கின்றதவ் வெள்ளம்
அம்மா வுன்னுயிர் ஆன்மா வன்றோ
அதுவும் விழிக்கச் செய்தே னம்மா
அசைத்திடு வாயுன் மாபெரு முடம்பை
அசைந்தே எழுந்தி(டு) அருங்கண் திறந்தி(டு)!
என்னைக் கண்டுநீ இன்பம் தந்திடு
நின்னை விழிக்கச் செய்யவே வந்தேன்
இல்லை யுறக்கம் என்று முனக்கினி
எவ்வெளி நாடும் உன்முன் னேற்றம்
இங்குத டுத்துநி றுத்தவி யலாது

**எ**ழுந்திடு அம்மா! எழுந்திடு! எழுந்திடு!
இன்பத் தாயே! எழுந்திடு! எழுந்திடு!
எல்லையி லாற்றல் உள்ளஎன் அம்மா
எழுந்திடு! செயல்புரி! எதிர்த்தோர் பொடிபட
ஏழை எளிய தாழ்ந்தவுன் குழந்தைகள்
ஏக்கம் தீர்ப்பாய்! ஏற்றம் தருவாய்!
உன்குலக் கொழுந்துகள் ஓங்கி யுயர்ந்திட
எங்கும் கல்வியை எவர்க்கும் கொடுப்பாய்
அன்பால் உன்றன் குழந்தைக ளெல்லாம்
முன்போ லொன்றுபட் டுயர்ந்திட வேண்டும்
அன்போ டவர்க்கறி வுரைகூ றிடுவாய்

**உ**ன்றன் பெருமை யுறங்கிய காலை
உன்குழந் தைகள் உணரா திருந்தன;
அன்னியர் பெருமையே அவனியில் பெரிதாய்
எண்ணி வாழ்ந்தன ரிதைமன் னிப்பாய்;
உண்மையே உயர்வாய், அன்பதே பண்பாய்
நன்மைசெய் வதுவே நற்புண் ணியமாய்
எங்கும் உறையும் இறைவன் தன்னை
இங்குகாண் பதுவே உன்குறிக் கோளென
இங்குன் குழந்தைகட் குணர்த்திடு வாயே
எங்கும் இதைவிடச் சிறந்த குறிக்கோள்
இல்லையென் பதையே எடுத்துரைப் பாய்நீ
அசைகின் றாயா! ஆ!ஆ! அம்மா!
**அம்மா எழுந்திடு! அருங்கண் திறந்திடு!**
ம்ம்ம்! ம்ம்ம்! ம்ம்ம்! ம்ம்ம்!
எழுந்திடு அம்மா! எழுந்திடு! எழுந்திடு!

என்னைப் பாரேன்! உன்றன் குழந்தை?
கண்திறக் கின்றாள்! காணும்! காணும்!
காண்கின் றாள்எனைக் காணும்! காணும்!
அம்மா! எழுந்துவிட் டாய்நீ! ஆ!ஆ!
அன்பால் என்னை அரவணைப் பாய்நீ

**உ**ன்றனைக் காண உன்மகன் யானும்
உளத்தில் ஏங்கின ஏக்கமும் கொஞ்சமோ
நின்றன் பெருமை நீணில மெல்லாம்
சென்று பறையாய்ச் சாற்றினே னம்மா!
வென்றே உன்றன் உயர்வைக் கூறி
அம்மா வந்தேன்! ஆனால்! . . . . ஓய்ந்தேன்!
என்றன் வேலை முடிந்தது இனிதே!
உன்றன் உறக்கம் தந்தி(டு) எனக்கே!
ஓய்விலா துழைத்த உடலைப் பாரேன்!
ஓய்வருள் நீயும் ஓய்வருள் வாயே
முன்நீ கொண்ட ஓய்வை எனக்கே
அன்னை நீயும் அருள்செய் வாயே.



# ஸ்ரீராமக்ருஷ்ண கர்ணாம்ருதம்

## ஸ்ரீ பாலபட்டர் அருளியது

உரையாசிரியர்: அண்ணா என். சுப்ரமண்யம்

### 13. திருவடிகளை நினைத்தாலே புளகாங்கிதம்

श्रीरामकृष्ण तव पादयुगाभिमर्शो
बुद्धया कृतोऽपि पुलकोद्गम-मातनोति ।
साक्षात् करेण विहितस्तु तदीय मर्शः
कं कं प्रदास्यति विकार-महं न जाने ॥ १३ ॥

*ஸ்ரீராமக்ருஷ்ண தவ பாதயுகாபிமர்ஶோ*
*புத்த்யா க்ருதோऽபி புலகோத்கம—மாதனோதி |*
*ஸாக்ஷாத் கரேண விஹிதஸ்து ததிய மர்ஶ:*
*கம் கம் ப்ரதாஸ்யதி விகார—மஹம் ந ஜானே ‖ 13 ‖*

*13. (ஸ்ரீராமக்ருஷ்ண) ஸ்ரீராமகிருஷ்ணப் பெருமானே! (தவ) உம்முடைய (பாத-யுக- அபிமர்ஶ:) இரு திருவடிகளைத் தொடுதல் (புத்த்யா) மனதால் (க்ருத: அபி) செய்யப்பட்டாலும் (புலக-உத்கமம்) மயிர்க்கூச்சத்தை (ஆதனோதி) உண்டாக்குகிறது. (ஸாக்ஷாத்) நேராக (கரேண) கைகளால் (ததிய மர்ஶ:) அப்படித் தொடுதல் (விஹித: து) ஏற்பட்டால் (கம் கம்) என்னென்ன (விகாரம்) உணர்ச்சியை (ப்ரதாஸ்யதி) அளிக்கும் என்பதை (அஹம்) நான் (ந ஜானே) அறியமாட்டேன்.*

*13. ஸ்ரீராமகிருஷ்ணப் பெருமானே! உம்முடைய இரண்டு திருவடிகளைத் தொடுதல் மனதால் செய்யப்பட்டாலும் மயிர்க்கூச்சத்தை உண்டாக்குகிறது. நேராக கைகளால் அப்படித் தொடுதல் ஏற்பட்டால், என்னென்ன உணர்ச்சியை அளிக்கும் என்பதை நான் அறியமாட்டேன்.*

### 14. உமது மனிதப்பண்பு தெய்வப்பண்பினும் சீரியது

महेश-भाव-स्तव हृद्य एव
मनुष्य-भावस्तु ततोऽपि हृद्यः ।
आद्ये गभीरे हृदयं विषक्तं
सौम्ये द्वितीये तु मनः प्रलीनम् ॥ १४ ॥

*மஹேஶ—பாவஸ்—தவ ஹ்ருத்ய ஏவ*
*மனுஷ்ய—பாவஸ்து ததோऽபி ஹ்ருத்ய:*
*ஆத்யே கபீரே ஹ்ருதயம் விஷக்தம்*
*ஸௌம்யே த்வதீயே து மன: ப்ரலீனம்'' ‖ 14 ‖*

*14. (தவ) உம்முடைய (மஹேஶ- பாவ:) மகேசுவரத் தன்மை (ஹ்ருத்ய: ஏவ) நிச்சயமாக மனதிற்கு இனியது. (மனுஷ்ய பாவ:து) மனிதத் தன்மையோ எனின் (தத: அபி) அதைக்காட்டிலும் கூட (ஹ்ருதய:) மனதிற்கு இனியது. (ஆத்யே கபீரே) முதலாவதின் கம்பீரத்தில் (ஹ்ருதயம்) உள்ளம் (விஷக்தம்)விடாத பற்றுதலே அடைகின்றது. (த்விதீயே ஸௌம்யே து) இரண்டாவதின் அழகிலோ எனின் (மன:) மனது (ப்ரலீனம்) கரைந்து போகிறது.*

*14. உம்முடைய மகேசுவரத் தன்மை நிச்சயமாக மனதிற்கு இனியது. மனிதத் தன்மையோ எனின் அதைக்காட்டிலும் கூட மனதிற்கு இனியது. முதலாவதின் கம்பீரத்தில் உள்ளம் விடாத பற்றுதலே அடைகிறது. இரண்டாவது அழகிலோ மனம் கரைந்து போகிறது.*



# திருவாசக இன்பம்

பிரம்மசாரி முத்துக்குமார்

பக்தி என்னும் பாற்கடலில் இருந்து கடைந்து எடுத்த வெண்ணெய் போல் திருவாசகம் விளங்குகிறது. பக்தி மார்க்கத்தைப் போதிக்கும் இலக்கியங்களுள் திருவாசகம் ஒரு தனி இடம் வகிக்கிறது. திருவாசகம் வெறும் வார்த்தை வன்மையின் படைப்பு அன்று. உடலும் உள்ளமும் உருக மணிவாசகரின் அந்தராத்மாவிலிருந்து எழுந்த ராகமே இந்த தேவகீதம்.

சொல் வளமும் பொருள் ஆழமும் திருவாசகத்தில் பூரணமாக விளங்குவதைக் காணலாம். உயர்ந்த எண்ணங்களுக்கும் தத்துவங்களுக்கும் சிறந்த சொல் அமைப்புக் கொடுக்கும்போது, அது வேதமாகவே ஆகிறது. அனுபூதிமான்கள் தாங்கள் கண்டறிந்த உண்மைகளை எந்த மொழியில் வெளியிட்டாலும் அது வேதம் என்று சொல்லுவது தவருகாது.

நமது உடல் பல நோய்களுக்கு உட்பட்டு வருந்துகிறது. கசப்பான மருந்து, ஊசி மூலம் மருந்து, அறுவைச் சிகிச்சை ஆகியவைகள் நமது உடல் நோயைப் போக்க உதவும் மருத்துவம். உடல்நோயும் அதை போக்க உதவும் சாதனமும் துன்பத்தையே தருகின்றன. இதை விட நமக்கு பிறப்பு இறப்பு என்னும் ஒரு மிக பெரிய நோய் இருந்து கொண்டிருக்கிறது. நமது ஜீவாத்மாவைப் பீடித்துள்ள பிணியே அது. இதையே பிறவிப்பிணி என்று பெரியோர்கள் கூறுவார்கள். பிறவிப் பிணியைப் போக்க உதவும் சாதனங்கள் பல உண்டு. அவைகளே சமய சாதனைகள் எனப்படுகின்றன. பெரும்பாலும் சமய சாதனைகளை அனுஷ்டிப்பது அவ்வளவு சுலபமானது அன்று. ஆனல் திருவாசகம் பிறவற்றோடு ஒப்பிடும்போது சுலபமான பக்தி வழியைக் காட்டுகிறது. தாய் தன் நோயுற்ற குழந்தைக்கு மாத்திரையை இனிப்பு பண்டத்தினுள் மறைத்து வைத்துக் கொடுக்கிருள். அதேபோலப் பிறவிப் பிணிக்கான மருந்து திருவாசகம் என்னும் தேனுள் நன்ருகக் குழைத்து வைக்கப்பட்டிருக்கிறது.

இந்தக் கருத்தையே—

தொல்லை இரும் பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லலறுத் தானந்தம் ஆக்கியதே—எல்லை
மருவா நெறி அளிக்கும் வாதவூர்எங்கோன்
திருவாசகம் என்னும் தேன்.

என்று திருவாசக சிறப்பு தெளிவுபடுத்துகிறது.

**திருவாசகத் தேனில் இரு துளிகள்:—**

அன்றே என்தன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய் என்னை
ஆட்கொண்ட போதே கொண்டிலையோ
இன்று ஓர் இடையூறு எனக்கு உண்டோ
எண் தோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய் வாய்
நானே இதற்கு நாயகமே

பக்திமார்க்கத்தின் மூலமாகக் கடவுளின் அருளை சுலபமாக பெறமுடியும். தந்தையின் கையைப் பிடித்துக்கொண்டு நடக்கும் குழந்தைக்கு தவறி விழும் ஆபத்து எந்த நேரத்திலும் உண்டு. ஆனல் தந்தையே குழந்தையின் கையைப் பிடித்துக்கொண்டு நடந்தால், குழந்தைக்கு தவறி விழும் ஆபத்து ஏற்படாது. அதேபோல கடவுளுடைய திருப்பாதங்களில் தன்னைப் பூரணமாக ஒப்படைத்த பக்தன் எப்பொழுதும் கடவுளையே சார்ந்து வாழ்கிருன். அவன் கடவுளின் நினைவிலேயே மூழ்கியவன். கடவுள் மயமானவன். நதி ஒன்று சமுத்திரத்தில் கலந்து அதனேடு ஒன்ருய் விடுவது போன்றது சரணுகதி. கடவுளின் செயல் கடலின் செயல் போன்றது. ஜீவன் செயல் அலையின் செயல் போல ஆகிவிடுகிறது. அலை, கடலிலிருந்து வேறுபட்டது இல்லை. அந்த நிலையில் ஜீவன் செயலாக தோன்றுவதெல்லாம் உண்மையில் கடவுளின் செயலே ஆகும். பக்தனைக் கருவியாகக்கொண்டு கடவுளுடைய சங்கல்பமே நிகழ்கிறது.

யான் ஏதும் பிறப்பு அஞ்சேன்
இறப்பு அதனுக்கும் என் கடவேன்
வான் ஏயும் பெறல் வேண்டேன்
மண்ஆள் வான் மதித்தும் இரேன்
தேன் ஏயும் மலர்க் கொன்றைச்
சிவனே எம் பெருமான் எம்மானே
உன் அருள் பெறும் நாள் என்று
என்றே வருந்து வனே.

மனிதனின் அன்பு, அவன் அன்பு செலுத்தும் பொருளின் தன்மைக்கு ஏற்ப வேறுபடுகிறது. தாய் தன் குழந்தைமீது செலுத்தும் அன்பு பாசம் எனப்படும். தலைவன் தன் தலைவியிடம் செலுத்தும் அன்பு காதல் எனப்படும். ஒருவன் தன் நண்பனிடம் கொள்ளும் அன்பு நட்பு எனப்படுகிறது. இவைகளெல்லாம் உண்மையில் சுயநலத்தை மையமாகக்கொண்ட அன்பின் வெவ்வேறு உருவங்களே ஆகும். பக்தன் கடவுளிடம் செலுத்தும் அன்பே பக்தி எனப்படும். பக்தி முதிர்ந்த நிலையில் பிரேமை என்று சொல்லப்படுகிறது. உண்மையான பக்தன் கடவுளிடமிருந்து சுயநலத்திற்காக எதையும் எதிர்பார்ப்பதில்லை. தூயபக்தி ஒன்றுக்காகவே அவன் கடவுளிடம் பக்தி செலுத்துகிறான். தனது பிறப்பு, இறப்பு பற்றியும் கூட அவன் கவலைப்படுவதில்லை. புழுவாய் பிறக்கினும் புண்ணியனது பொன்னடியிலிருந்து தனது மனம் வழுவாது இருக்க வரம் பெற்றுக் கொண்டவனல்லவா அவன்? இவ்வுலகத்து இன்பங்களையோ, மறு உலக இன்பங்களையோ அல்லது இந்திர பதவியையோ அவன் பொருட்படுத்த மாட்டான். ஏனெனில் அவன் வேண்டுவது ஆண்டவன் அருள் ஒன்றே.



# கண்ணனின் குறும்புத்தனம்!

ர. வேங்கடரத்தினம்

கண்ணனின் குழந்தைக் குறும்புத்தனம் பற்றி யசோதைக்கு அண்டை அயலார் வீடுகளினின்று குற்றச்சாட்டுக்கள் வந்த வண்ணம்



தான்! பாதிக்கப்பட்டவர்கள் எவ்வளவு நாட்கள் பார்த்துக்கொண்டு, பொறுத்திருப்பர்?

ஒரு வீட்டிலே நடப்பது! பாலைப் புத்தம் புதிதாய்க் கறந்து பாத்திரத்தில் எடுத்து வந்து, வீட்டுப் பெண்மணி அடுப்பின் மீது ஏற்றி வைத்துவிட்டு, அடுப்பு மூட்ட மேலை வீட்டுக்குச் சென்று தணல் வாங்கி வருகிறேன் என்று தன் பெண்ணினிடம் கூறிவிட்டுச் செல்வாள். பெண் அப்படியொன்றும் ஒன்றும் தெரியாதவள் அல்லள். வளைகாப்புக்காரியெனக் கரங்களில் பல் வளைகளும் அணிந்துகொண்டு அழகாக அமர்ந்திருக்க, எங்கிருந்தோ வந்த கிருஷ்ணன் கலத்தைச் சாய்த்துப் பாலைப் பருகிப் போந்தான்.

நெருப்பு வாங்கச் சென்றவள், சாண்பொழுது பேசிக்கொண்டிருந்துவிட்டு வந்து பார்க்கையில் அடுப்பின்மீது பாத்திரத்தில் பால் இல்லை. ஆலைக் கருப்பஞ்சாறுக இனிக்க இனிக்கப் பேசும் யசோதை, மகனைக் கண்டித்து வைக்கவில்லை எனக் கோபம் வருகிறது!

பாலைக் கறந் தடுப்பேற வைத்துப்
பல்வளையாள் என் மகள் இருப்ப
மேலை யகத்தே நெருப்பு வேண்டிச் சென்
றிறைப் பொழு தங்கே பேசி நின்றேன்
சாளக் கிராம முடைய நம்பி
சாய்த்துப் பருகிட்டுப் போந்து நின்றான்
ஆலைக் கரும்பின் மொழி யனைய
அசோதை நங்காய் உன் மகனைக் கூவாய்.

சாளக்கிராமம் என்னும் திவ்விய தேசத்தில் சேவை சாதிக்கும் எம்பெருமானை நினைந்து இவ்வண்ணம் பெரியாழ்வார் பாடுவார்.

அக்கம் பக்கத்து வீட்டில் உள்ளோர்க்கு அநியாயம் செய்வதுதான் உன் வழக்கமோ என்று யசோதையினிடம் ஒருத்தி சண்டையிட வருவாள். ஏனெனில் அவள் வீட்டில் கண்ணன் புகுந்து உருக வைத்த கலத்தோடு வெண்ணெயை அப்படியே எடுத்து உறிஞ்சி விட்டுப் போதாது இவ்வளவும் என்றுப்போல் பானையைக் கீழே போட்டு உடைத்து நொறுக்கிவிட்டுச் செல்ல, அந்த வீட்டுக்காரிக்கு யசோதையின் மீது சொல்லொணுத் தாங்கல். ''உன் மகனை வாவென்று உடன் அழைத்துக் கொள்வாயா, மாட்டாயா?'' என்று கேட்கிறாள்.

உருக வைத்த குடத்தோடு வெண்ணெய்
உறிஞ்சி யுடைத்திட்டுப் போந்து நின்றான்
அருகிருந்தார் தம்மை அநியாயம் செய்வது
தான் வழக்கோ அசோ தாய்!
வருக என்றுன் மகன் தன்னைக் கூவாய்
வாழவொட்டான் மது சூதனனே

நெய் முழுவதையும் உறிஞ்சிய பிள்ளைக் கலயத்தையேனும் உடைக்காது விட்டிருக்கலாகாதா? இத்தகைய பிள்ளையை ஊரில் வைத்துக்கொண்டால், நாங்கள் வாழ்ந்தாற்போலத் தான்!

பெரியாழ்வார், வாழவொட்டான் மதுசூதனனே எனும்போது, உள்ளத்தின் அடித்தளத்திலே ஆனந்தம் அனுபவிப்பார். வையகமும் அண்ட சராசரமுமே வாழ்விக்க வந்த வித்தகன் எவளோ ஒருத்தியை மட்டும் விட்டுவிடுவானே?

இது வேறொரு வீடு! பாத்திரத்தில் தின்பண்டங்கள் நிரம்பப் பண்ணி வைத்துள்ளாள் வீட்டுப் பெண்மணி. இனிக்கும் கருப்பஞ் சாற்றில் செய்த லட்டு, சீடை, கறுப்பு எள்ளிற் செய்த எள்ளுருண்டை இவ்வளவும் செய்து, நம் வீட்டில் வைத்துச் செல்லக் காவல் எதற்கு என எண்ணி வெளியே செல்வாள். சமயம் பார்த்து கண்ணன் புகுந்துவிடுவான். பட்சண வகைகளைத் தீர்த்துவிட்டுப் போவான். அத்தோடு நிறுத்திக் கொள்ளாமல், திரும்ப உள்ளே வந்து உறியில் தொங்கும் வெண்ணெயையும் சோதனை போடுவான். நன்றாகக் கடைந்து, திரட்டி வைத்துள்ள வெண்ணெய்க்கும் இவனால் வந்தது ஆபத்து!

இப்படியாகக் கண்ணன்மீது புகார்கள் எவ்வளவோ. அவற்றில் இவை சிலவே என்பதாக பெரியாழ்வார் பாடுவார்.

கன்னல் இலட்டுவத் தோடு சீடை
காரெள்ளில் உண்டை கலத்திவிட்டு
என்னகம் என்று நான் வைத்துப்போந்தேன்
இவன் புக் கவற்றைப் பெறுத்திப் போந்தான்
பின்னும் அகம் புக் குறியை நோக்கிப்
பிறங்கொளி வெண்ணெயும் சோதிக்கின்றான்
உன் மகன் தன்னை யசோதை நங்காய்
கூவிக்கொள்வாய் இவையும் சிலவே.

மேலை வீடு—கீழண்டை வீடு—எதிர்த்த அகம் பார்த்தாயிற்று. யாவும் ஒரே கதைதான். நந்த கோகுலம் நெடுகக் கண்ணனின் மீது இதே போலக் குற்றச்சாட்டுக்கள்தாம்!



வீரர்கள் மரணத்துக்கு அஞ்சாமல் நிற்பார்களானால், அவர்கள் அதை எதிரிகளிடம் துரத்தியடித்துவிடுவார்கள்.
—நெப்போலியன்

காணிக்கைகளுடன் வரும்போதுதான் நாம் உண்மையாகவே கடவுளைச் சந்திக்கிறோம். தேவைகளுடன் வரும்போது அல்ல.
—தாகூர்

உயர்ந்தவன் தாழ்ந்தவன், பணக்காரன் ஏழை என்று எனது கோட்பாடு பேதம் எதையும் காண்பதில்லை. அது வானத்தைப் போன்றது. எல்லோருக்கும் அதில் இடம் உண்டு. நீரைப் போல அது எல்லோரையும் தூய்மைப்படுத்தும்.
—புத்தர்

கங்கையில் நீராடியவர்களின் 7 தலைமுறைகளுக்குப் பாவம் அணுகாது. ஒரு மனிதனின் அஸ்தி கங்கை ஜலத்தைத் தொட்டுக் கொண்டிருக்கும் வரை அந்த மனிதன் சொர்க்கத்தில் பெருமைப் படுத்தப்படுவான்.
—மகாபாரதம்

# மனதின் ஆற்றல்கள்

சுவாமி விவேகானந்தர்

ஒரு கருத்தை எடுத்துக்கொள். அந்த ஒரு கருத்தையே உனது வாழ்க்கை மயமாக்கு. அதையே கனவு காண், அந்த ஒரு கருத்தை ஒட்டியே வாழ்ந்து வா. மூளை, தசைகள், நரம்புகள், உன் உடலின் ஒவ்வொரு பாகத்திலும் அந்த ஒரு கருத்தே நிறைந்திருக்கட்டும். அந்த நிலையில் மற்ற எல்லாக் கருத்துக்களையும் தவிர்த்து



விடு. வெற்றிக்கு இதுதான் வழி. நாம் உண்மையிலேயே பாக்கியவான்களாக விரும்பினுல், மற்றவர்களையும் பாக்கியவான்களாக்க விரும்பினுல்—நம்முள் நாம் மேலும் ஆழ்ந்து செல்ல வேண்டும்.

* * *

உலகில் தோன்றிய மாபெரும் தீர்க்கதரிசிகள் அனைவரும், மகான்களும், ஞானிகளும் என்ன செய்திருக்கிருர்கள்? அவர்கள், தங்களுடைய ஒரு ஆயுட்காலத்திலேயே மனித வர்க்கத்தின் முழு வாழ்க்கையையும் வாழ்ந்து, சாதாரண மக்கள் கூட்டம் பரிபூரண நிலையைப்பெற எடுத்துக்கொள்ளும் கால அளவு முழுவதையும் கடந்துவிடுகிருர்கள். ஒரே வாழ்க்கையில் அவர்கள் தங்களைப் பரிபூரணப்படுத்திக்கொண்டு விடுகிருர்கள். வேறு எதைப் பற்றிய சிந்தனையும் அவர்களுக்கு இருப்பதில்லை. ஒருபோதும் வேறு எந்தவிதமான கருத்துக்காகவும் ஒருகணமும் அவர்கள் வாழவில்லை. இதனுல் அவர்கள் அடைய வேண்டிய பாதை அவர்களுக்குக் குறுகியதாகி விடுகிறது. உள்ளத்தை ஒருமுகப்படுத்துவது என்பது இதுதான். மனதின் ஆற்றலை ஒருமுகப்படுத்தி ஆழ்ந்து செல்வதால், தேவையான காலத்தை இவ்விதம் நாம் சுருக்கி விடலாம்.

* * *

ஒருமுகப்படுத்தும் இந்த ஆற்றல் வளர வளர, அதிக அளவில் அறிவைப் பெறலாம். ஏனென்ருல், இந்த வழிதான் அறிவைப் பெறுவதற்குரிய ஒரேவழி. தாழ்ந்த நிலையில் உள்ள செருப்புக்கு மெருகு போடுபவன், மனதை அதில் அதிகம் ஒருமுகப்படுத்திச் செய்தால், மேலும் சிறப்பாகச் செருப்புக்களுக்கு மெருகு பூசுவான். மனதை ஒருமுகப்படுத்திச் செய்யும் சமையல்காரன் மேலும் சிறந்தமுறையில் உணவு சமைப்பான். பணம் சேர்ப்பதோ, கடவுள் வழிபாடோ அல்லது வேறு எந்த ஒரு வேலையானுலும் மனதை ஒருமுகப்படுத்தும் ஆற்றல் வளர வளர, மேலும் சிறப்பாக அந்தக் காரியத்தைச் செய்து முடிக்கலாம். இந்த ஒரு குரல், ஒரே தட்டுதல், இயற்கையின் கதவுகளைத் திறந்து ஒளி வெள்ளங்களை வெளியே பாய்ந்தோடச் செய்கிறது.

* * *

உலகிலுள்ள அறிவு அனைத்தையும், மனதின் ஆற்றல்களை ஒருமுகப்படுத்துவதைத் தவிர, வேறு எந்த வகையால் மக்கள் பெற்றிருக்கிருர்கள்? மூடப்பட்டுள்ள கதவை எப்படித் தட்ட வேண்டும்? எப்படித் தேவையானபடி தாக்க வேண்டும்? என்பது மட்டும் நமக்குத் தெரிந்திருந்தால், உலகம் தனது இரகசியங்களை வெளியிடத் தயாராக இருக்கிறது. அத்தகைய வலிமையும், தாக்கும்வேகமும் மனதை ஒருமுகப்படுத்துவதன் மூலம்தான் கிட்டுகிறது. மனித உள்ளத்தின் ஆற்றலுக்கு ஓர் எல்லையே இல்லை.

* *

மனது அதிகமாக ஒருமுகப்படப்பட அதன் ஆற்றல் அதிகமாக ஓர் இடத்தில் செலுத்தப்படுகிறது. இதுதான் மனதின் ஆற்றலைப் பற்றிய இரகசியமாகும்.

* * *

எந்த ஒரு சக்தியையும் புதிதாக உண்டாக்க முடியாது. ஏற்கனவே உள்ள சக்தியைத்தான்

வேறு திசைக்கு நாம் திருப்பிவிட முடியும். எனவே, நமது கைகளில் ஏற்கெனவே உள்ள மாபெரும் ஆற்றல்களை அடக்கியாள நாம் கற்றுக்கொள்ள வேண்டும். அவைகளை மனதின் வலிமையைக்கொண்டு வெறும் மிருகசக்தியாக இருப்பதற்குப் பதிலாக, ஆன்மிக சக்தியாக இருக்கச்செய். பிரம்மசரியம்தான் எல்லா ஒழுக்கங்களுக்கும், எல்லா மதங்களுக்கும் அடித்தளமாக விளங்குகிறது என்பது இதனின்று தெளிவாகிறது.

* * *

சுதந்திரம் பெற்றவர்களாம்! நமது மனதை ஒருகணம்கூட அடக்கியாள முடியாத நாம், அவ்வளவு ஏன், ஒரு கருத்தின் மீது நமது மனதை உறுதியாக நிலைத்திருக்கச் செய்ய வகையறியாத நாம், மற்ற சிந்தனைகளை ஒதுக்கித் தள்ளிவிட்டு ஒருமுனையில் (குறிப்பிட்ட ஒன்றின்மீது) ஒருகணம் மனதை ஒருமுகப்படுத்த தெரியாதவர்கள் அல்லவா நாம்? அப்படி இருந்தும் நம்மை நாம் சுதந்திரமானவர்கள் என்று சொல்லிக் கொள்கிறோம்! இதை நினைத்துப் பாருங்கள்! .... அடக்கப்படாமல் சரியான வழியில் செலுத்தப்படாத மனம், நம்மை, மேலும் மேலும் என்றென்றைக்குமாக கீழே இழுத்துச் சென்றுவிடும். நம்மைப் பிளந்துவிடும். அழித்து விடும். ஆனால் அடக்கப்பட்டுச் சரியான வழியில் செலுத்தப்பட்ட மனமோ நம்மைக் காத்து இரட்சிக்கும். நம்மை விடுதலைப் பெறச் செய்யும்.

* * *

மக்களுக்கும் விலங்குகளுக்கும் உள்ள வேறுபாடு, அவர்கள் தங்களுடைய மனதை ஒருமுகப்படுத்தும் ஆற்றலின் வேற்றுமையில்தான் அடங்கி இருக்கிறது. எந்தத் துறையைச் சேர்ந்த வேலையானாலும், வெற்றிகள் அனைத்தும் இந்த மன ஒருமைப்பாட்டின் விளைவாகவே வருகின்றன. மனதை ஒருமுகப்படுத்தும் ஆற்றலில் மக்களுக்கு உள்ள வேற்றுமையே, ஒருவனுக்கும் மற்றொருவனுக்கும் உள்ள வேறுபாடாகவும் அமைகிறது. மிகத்தாழ்ந்த நிலையிலுள்ள மனிதனை, மிக உயர்ந்த நிலையிலுள்ள மனிதன் ஒருவனோடு ஒப்பிட்டுப் பார். அவர்களிடையே உள்ள வேற்றுமை, மனதை ஒருமுகப்படுத்தும் திறமைக்கேற்பவே அமைந்திருக்கும்.

* * *

சிந்தனையின் தொண்ணூறு சதவிகித ஆற்றல் சாதாரண மனிதனால் வீணாக்கப்படுகிறது. எனவே தொடர்ந்து அவன் பெரிய தவறுகளைச் செய்து கொண்டே இருக்கிறான். சரியான பயிற்சியைப் பெற்ற மனிதனோ, மனமோ ஒருபோதும் தவறு செய்வதில்லை.

* * *

அற்ப இதயமுடைய மனிதர்களிடம் இருந்து எந்த உருப்படியான வேலையை நீ எதிர்பார்க்க முடியும்? இந்த உலகில் எதையும் அவர்களிடமிருந்து எதிர்பார்க்க முடியாது! நீ கடலைக் கடக்க விரும்பினால் இரும்பைப் போன்ற மன உறுதி உன்னிடம் இருந்தாக வேண்டும். மலைகளைத் துளைத்துச் செல்வதற்குப் போதுமான வலிமை உனக்கு இருக்க வேண்டும்.

* * *

நல்ல எண்ணங்கள், தீய எண்ணங்கள் ஆகிய ஒவ்வொன்றும் தனித்தனியே வலிமை மிக்க ஆற்றலைப் பெற்றிருக்கின்றன. இந்தப் பிரபஞ்சம் முழுவதிலும் அவை நிறைந்திருக்கின்றன. இவைகளின் அதிர்வுகள் தொடர்ந்து இருந்து வருவதால், அந்த எண்ணங்கள் செயலுக்கு வரும் வரையிலும் அவை கருத்து வடிவத்தில் இருக்கின்றன. உதாரணமாக மனிதன் கையிலுள்ள ஆற்றல், அவன் ஓர் அடி அடிக்கும் வரையிலும், அவன் அந்த ஆற்றலுக்குச் செயல் வடிவு தரும் வரையிலும் மறைந்திருக்கிறது. நாம் நல்ல, தீய எண்ணங்களின் உரிமையாளர்களாக இருக்கிறோம். நாம் நம்மைத் தூய்மைப்படுத்தி நல்ல எண்ணங்களின் கருவிகளாக்கிக் கொண்டால், அவை நம்முள் நுழைகின்றன. நல்ல ஆன்மா தீய எண்ணங்களை எளிதில் ஏற்பதில்லை.

* * *

மனித சமுதாயத்தின் வரலாற்றில் தெய்வத்தின் தூதுவர்களாக ஆசாரியர்கள் தோன்றுவதையும், பிறந்தது முதல் அவர்கள் தங்களின் வாழ்க்கை நோக்கத்தைக் கண்டறிந்து அதற்கு அவர்கள் வடிவு கொடுத்திருப்பதையும் நீ பார்க்கலாம். அவர்களின் வாழ்க்கை நோக்கம் முழுவதும் ஏற்கனவே முன்கூட்டியே திட்டமிடப்பட்டிருக்கிறது. அதிலிருந்து இம்மி அளவும் அவர்கள் பிறழாதிருப்பதை நீ காண்பாய். ஏனென்றால் ஒரு குறிக்கோளுடன் மக்களுக்குத் தருவதற்கான ஒரு செய்தியுடன் அவர்கள் வருகிறார்கள்.... அவர்கள் பேசும்போது ஒவ்வொரு சொல்லும் நேரிடையாகத் தாக்குகிறது. ஒரு வெடிகுண்டைப்போல வெடிக்கிறது. சொல்லுக்குப் பின்னால் சக்தி இல்லாவிட்டால், அதில் என்ன பயன் இருக்கிறது?

நீ எந்த மொழியில் பேசினால் என்ன? உனது மொழியை நீ எப்படி அமைத்துக்கொண்டால் என்ன? அதை நீ சுத்தமான இலக்கணத்திலோ அல்லது அருமையான அடுக்கு மொழியிலோ பேசாவிட்டால்தான் என்ன? உனது மொழி அலங்காரம் உடையதாக இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன? உன்னிடம் கொடுப்பதற்கு ஏதாவது இருக்கிறதா, இல்லையா என்பதுதான் கேள்வி. பேசுபவன் ஒன்றைக் கொடுப்பதும், கேட்பவன் அதை கிரகித்துக் கொள்வதும்தான் பிரச்னை. சும்மா வெறுமனே காது

கொடுத்துக் கேட்டுக் கொண்டிருப்பதல்ல. முதல் கேள்வி இதுதான்—உன்னிடம் கொடுப்பதற்கு ஏதாவது இருக்கிறதா? அப்படி இருந்தால் அதை மற்றவர்களுக்கு கொடு.

* * *

நீ எதைச் செய்தாலும் அதன் பொருட்டு உனது மனம், இதயம், ஆன்மா முழுவதையும் அதற்கு அர்ப்பணித்து விடு. ஒருமுறை சன்னியாசிப் பெரியார் ஒருவரை நான் சந்தித்தேன். அவர் தமது கடவுள் வழிபாட்டிற்கும் தியானத்திற்கும் எவ்வளவு ஊன்றிக் கவனமும் கருத்தும் செலுத்தினரோ, அதே அளவுக்கு ஊன்றிய கருத்தோடும் தமது பித்தளை சமையல் பாத்திரங்களையும் தேய்த்துப் பொன் போல பிரகாசம் உள்ளதாகச் செய்து கொள்வார்.

* * *

இப்போது நாம் வாழும் வாழ்க்கையில் தூய்மையை எப்படிப் பெறுவது? நாம் அனைவரும் காட்டிலுள்ள குகைகளுக்குப் போய்விடலாமா? அதனுல் என்ன நன்மை வந்துவிடும்? மனம் கட்டுப்பட்டு அடங்காவிட்டால், குகையில் வாழ்வதால் மட்டும் எந்தவித பயனும் கிடைக்காது. ஏனென்றுல், இதே மனம் எல்லா தொந்தரவுகளையும் அங்கேயும் கொண்டு வந்து சேர்த்துவிடும். குகையில்தான் இருபது பேய்களை நாம் பார்ப்போம். ஏனென்றுல் எல்லாப் பேய்களும் நமது மனதிலேயே இருக்கின்றன. கட்டுப்பட்டு மனம் அடங்கியிருந்தால், நாம் எந்த இடத்தில் இருந்தாலும், எங்கிருந்தாலும் அந்த இடம் குகையாக ஆகிவிடும்.

நமது சொந்த மனப்பான்மைதான் நமக்கு ஏற்றுர்போல உலகத்தைத் தோன்றும்படி செய்கிறது. நமது எண்ணங்களே பொருள்களை அழகு பொருந்தியவைகளாக்குகின்றன; நமது எண்ணங்களே பொருள்களை அவலட்சணமாக்குகின்றன. இந்த உலகம் முழுவதும் நமது சொந்த மனதிலேயே அடங்கி இருக்கிறது. எல்லாவற்றையும் சரியான முறையில் புரிந்துகொள்ள கற்றுக்கொள்.



# மதிப்புரை

## மனேதத்துவ ஆராய்ச்சி

[ஆசிரியர்: சி.யூ.நஞ்சப்பா. வெளியிட்டோர்: முருகானந்த நிலையம். சிக்காரம்பாளையம் அஞ்சல், காரமடை—வழி: கோயம்புத்தூர். பக். 200; விலை ரூ. 7.50.]

திரு சி.யு. நஞ்சப்பா அவர்கள் எழுதிய 'மனேதத்துவ ஆராய்ச்சி' என்னும் நூல், பொதுவாக 'சைகாலஜி' என்று ஆங்கிலத்தில் கூறப்படும் 'மனே தத்துவம்' பற்றிய ஆய்வன்று. அருளியல், உலகியல் ஆகிய இரு நிலைகளிலும் நின்று செய்யப்பட்ட அரிய ஆய்வாகும்.

ஆசிரியர் தாம் எடுத்துக்கொண்ட ஆய்வை அறுபத்து நான்கு தலைப்புக்களில் தொகுத்து வழங்குகிறுர். அனுபூதிமான்களின் அருளுரைகளை ஒவ்வொரு தலைப்பிலும் பொருத்தமாக எடுத்தாள்கிறுர்.

சமய—தத்துவக் குறியிடுகளைக் கொண்டு குழப்பமடைவோர் குறைதீர, மனதை மையமாக வைத்து நிகழ்த்திய ஆய்வு பாராட்டுதலுக்குரியது. ''கற்ற சில வேதாந்த சித்தாந்த நூல்களின் சாரத்தையும், சாதுக்கள் கூட்டுறவால் அறிந்துகொண்டவைகளையும் இறைவன் அருளைத் துணைக்கொண்டு இச்சிறு நூலை இயற்றியிருக்கிறேன்''என்று முன்னுரையில் நூலாசிரியர் குறிப்பிட்டிருக்கிறுர்.

சிக்கலான தத்துவ நுட்பங்களைப் புரிகிற மொழியில் எளியபாணியில் சுயசிந்தனை வெளியீடுகளாக ''மனதின் செயல்'' என்ற தலைப்பில் பதினுலு பக்கங்களில் தனியாக அமைத்துக் கொடுத்துள்ளது குறிப்பிடத்தக்கது. இதில் பிரம்மம், மாயை, ஆத்மா பற்றிய தெளிவை உணர்த்தும் பகுதிகள் இடம் பெற்றிருக்கின்றன.

தவத்திரு சுவாமி சோமானந்தர் அவர்கள் வழங்கிய அணிந்துரையில், ''மனதைப் பற்றிய நூல்கள் தமிழில் மிகுதியாக இல்லையென்றே சொல்லவேண்டும். இக்குறையை நீக்கும்முறையில் பல சிறந்த கருத்துக்களை திரு. சி.யு. நஞ்சப்பா அவர்கள் தொகுத்து அளித்திருக்கிறுர்கள்'' என்று சுட்டிக்காட்டியதன் வாயிலாக தமிழுக்கு கிடைத்த புதிய வரவாகவும் இந்நூல் வரவேற்பிற்குரியது.

எழுத்தின் நடை, தெளிவு, குறிக்கோள் யாவும் சாதாரண மக்களும் கற்றுப் பயனடைய வேண்டும் என்பதனையே ஆதாரமாகக் கொண்டுள்ளன. இந்நூலைப் படைத்தளித்த ஆசிரியர் தொண்டு வாழ்க, சிறக்க.

—பெ. சு. மணி





# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

(16—6—77 முதல் 15—7—77 வரை)

ஸ்ரீமத் சுவாமி ராமகிருஷ்ணானந்தர் ஜயந்தி

*14—7—77 வியாழன்:* ஜன்மதிதி - விஷேச பூஜை, ஹோமம் முதலியன
*(காலை 5 மணி முதல் 12 மணி வரை)*
மாலை 7—15க்கு ஆரதிக்குப் பிறகு வழக்கம் போல தமிழிலும் ஆங்கிலத்திலும் உரை நிகழ்ச்சிகள் நடைபெறும்.

**சத் சங்கம்: ஞாயிறுதோறும்** — மாலை 4 மணி முதல் 8 மணி வரை.

*மாலை 4 முதல் 4.20 வரை* — ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (19—6—77 & 3—7—77)
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (26—6—77 & 10—7—77)

*மாலை 4.20 முதல் 4.30 வரை* — தியானம்

*மாலை 4.30 முதல் 5.30 வரை* — சொற்பொழிவு (தமிழ்)

1. **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்**
   திரு V. R. கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (19—6—77)
2. **ஸ்ரீமத் ராமாயணம்**
   டாக்டர் என். வீழிநாதன் (26—6—77)
3. **ஸ்ரீமத் பாகவதம்**—திரு 'அண்ணு' சுப்ரமண்யம் (3-7-77)
4. **ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்**
   டாக்டர் டி. எம். பி. மகாதேவன் (10—7—77)

*மாலை 5.30 முதல் 6.30 வரை* — சொற்பொழிவு (ஆங்கிலம்)
**ஸ்ரீமத் பகவத்கீதை**—சுவாமி கபீரானந்தர்

**சிறப்புச் சொற்பொழிவுகள்:**

*சனிக்கிழமை மாலை 5.45 மணிக்கு*

1. **இராமாயணத்தின் சாரம்**
   திரு V. A. பத்மனப சர்மா (18—6—77)
2. **கருணைக் கடவுள்**
   சுவாமி கீர்த்திதானந்தர் (25—6—77)
3. **இராமாயணத்தில் ஆராய்ச்சி**
   திரு பி. ராமகிருஷ்ணன் (2—7—77)
4. **கஜேந்திர ஸ்துதி** திரு க. கோதண்டராமன் (9—7—77)

வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்—*(மாலை 5-45)*

*திங்கள்:* (ஆங்கிலம்) **ஸ்ரீ ராமகிருஷ்ண கதாம்ருதம்** —சுவாமி அம்ருதானந்தர்

*செவ்வாய்:* (ஆங்கிலம்) **ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்** —சுவாமி கபீரானந்தர்

*புதன்:* (தமிழ்) **மகாபாரதம்**—திரு 'அண்ணு' சுப்ரமண்யம்

*வியாழன்:* (தமிழ்) **ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்** —பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

*வெள்ளி:* (ஆங்கிலம்) **அருள் மொழிகள்**—சுவாமி கீர்த்திதானந்தர்

*வெள்ளி:* (ஆங்கிலம்) **ஸ்ரீமத் பகவத்கீதை** மாலை 6-30
சுவாமி கோலோகானந்தர் (ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம் 18, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி.)

**விசேஷ தினங்கள்:** அந்தர் யோகம் (சாதனை தினம்)—ஞாயிறு (19—6—77)
குருபூர்ணிமா (1—7—77)
ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்: ஏகாதசி தினங்களில் ஆரதிக்குப் பிறகு (27—6—77 & 12—7—77)

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்

*தலைவர்,*

தொலைபேசி: 71231 — ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

ஆசிரியர்: சுவாமி சித்கனனந்தர்; கூட்டு ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்

பதிப்பாளர்: சுவாமி சித்கனனந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் சென்னை 600004

அச்சிடுபவர்: S. இராமசுவாமி ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ் 97 லாய்ட்ஸ் ரோடு சென்னை 600086